# முன்னுறை

வாசக நண்பர்களே,



இந்த புத்தகத்தோட சிறப்பு என்ன தெரியுமா?

கந்தசாமி அண்ணன்னு ஒரு நண்பர் சொல்லி, நான், எழுதினது.

அது யாரு இந்த கந்தசாமி? அவரு என்ன ஒரு மேதாவியா. அப்படின்னு கேட்பீங்க.

கந்தசாமின்னு ஒருத்தரு. ஒரு சின்ன கிராமத்துலே பிறந்து, வளர்ந்த்து பத்து கிளாஸ் வரை படிச்சு மிலிட்டரில்லே சேர்ந்தார். இந்தியாவுலே பல பகுதியிலே வாழ்ந்தவரு, என்னோட புத்தகங்கள்ளெல்லாமே படிச்சு

எனக்கு ஒரு நல்ல ரசிகராயிட்டாரு.

அப்பப்ப வருவாரு. ஏழங்களோட பிரச்சன, அதை எப்படி தீர்க்கரத்துன்னு விவாதம் பண்ணுவாரு. என் புத்தகத்துலேந்தே நிரைய பாயிண்டுகளே எடுத்து எனக்கே சொல்லுவாரு.

எந்த புத்தகம் கெடச்சாலும் படிப்பாரு. அதுலேந்து, தவறாம, அறிவு தேடிப் புடிப்பாரு.

அவரு எதச் சொன்னாலும் சொல்ற விதம் ரொம்ப எளிமையா இருக்கும். அவருடைய கற்றுத் தெளிந்த அறிவு, அனுபவ அறிவு இரண்டும் மட்டுமில்லாமல், ஆன்மிக அறிவுகூட ரொம்ப ஆழந்தான்.

அவரு எப்போதும் சொல்கிற மாதிரி, எதக் கேட்டாலும், படிச்சாலும், பார்த்தாலும் இதுலேந்து நாம கத்துக்கிட்டது என்னன்னு சிந்திக்கணும். சும்மா பொழுது போக புத்தகத்தைப் புரட்டினால் பிரயோசனம் இல்லேம்பாரு.

ஏழையா பொறதுட்டேன்னு அழுதா பிரயோசனம் இல்லே. வாழ்கையிலே ஓடப்பழகனும். உட்காந்து விடக் கூடாது என்பார்.

நாமெல்லாம் ஏழையாகமல் இருப்பது எப்படி, ஏழைகள் ஏழ்மைய ஓட்டுவது எப்படின்னு ஆராச்சி பண்ணிட்டோம்.

இதை மிலிட்டரி கந்தசாமி அண்ணன், சொல்கிரார். படிக்கிறவங்க மனசிலே பதிய வைக்க, தகுந்த சில கதைகளையும் சில உண்மை நிகழ்ச்சிகளையும் உதாரணமாக சேர்க்கரார்.

இப்போ, அருமை ஏழைகளே, இந்த புத்தகத்தை கவனமாகப் படிங்க. ஏதாவது தெரியவில்லை என்றால் சொல்லுங்க, கந்தசாமி அண்ணனக் கேட்டு பதில் போடறேன்.

இந்த புத்தகத்தைப் படிச்சுட்டு படிச்சதை மனசுலே கெட்டியா பதிச்சுருங்க. எந்த முடிவை எடுக்கும் முன்னாடி

இதுலே கந்தசாமி அண்ணன் சொன்ன விசயம் ஏதாவது, கவனிக்க வேண்டியது  இருக்கான்னு பாருங்க.

அப்படி இருந்துச்சுன்னா, அப்படியே கந்தசாமி அண்ணன் சொல்கிற மாதிரி செய்து விடுங்கள். அப்ப ஏழ்மை ஓடுதா இல்லியான்னு பாருங்க.

இப்போலேந்து கந்தசாமி சொல்லுவாரு, நான் அதை எழுதிடுவேன். அப்பப்ப சந்தேகம் வரப்போ அவரைக் கேள்வி கேப்பேன். என் கேள்வியையும் அவரு பதிலயும் அப்படியே எழுதிடுவேன்.

நடராஜன்

## அன்புள்ள ஏழைகளே

ஔவையாரு, சுப்பிரமணிய பாரதி, ராமலிங்க வள்ளலாரு - இவங்கள்ளாம், ரொம்ப அறிவோட வாழ்ந்தவங்க மட்டுமில்லை. ஏழைகள் மேலே ரொம்ப கருணை உள்ளவங்க. இந்த மூணு பேரும், முக்கியமா, ஏழ்மையப் பற்றி, பசிக் கொடுமையைப் பற்றியும், சுத்தமா தெரிஞ்சவங்க. அவங்களுக்கு என் வணக்கத்தைச் சொல்லி நான் சொல்ல வந்ததை ஆரம்பிக்கறேன்.

## ஏழைகள் கறிவேப்பிலை மாதிரி:

ஏழைங்க பெருமைப்படக் கூட நிறைய இருக்கு. அதைப் போகப் போக பார்க்கலாம்.

சமையலுக்கு கறிவேப்பிலை எத்தனை அவசியமோ அதைவிட, ஏழைங்க சமுதாயத்திற்கு ரொம்ப ரொம்ப அவசியமானவங்க.

கறிவேப்பிலை இல்லாம கூட சமையல் செய்யலாம். ஆனால் ஏழைகள் இல்லாம அரசியலும் சரி ஆண்டவனும் சரி  அழிஞ்சிருவாங்க. இது உறுதி.

அட அரசியல் அழிவது புரிகிறது, ஆனால் ஆண்டவன் ... புரியலியேன்னு சொல்லுவீங்க!! அது இப்போதைக்கு மனசு ஓரத்திலே வச்சிருங்க.

ஓட்டங்கள் என்ற தலைப்பில் வரும் ஒரு புத்தகம், நடராஜன் சாரு எழுதராரு. அதப்பத்தி என்னுடன் நிரைய விவாதம் பண்ணுவாரு. அது புரிய வைக்கும். இப்போதக்கி, நாம கறிவேப்பிலைக்குப் போயிருவோம்.

கறிவேப்பிலையை கடையிலேந்து தவறாம வாங்கி வருவாங்க, பத்திரமாக அதப் பாதுகாத்து, கழுவி, கறியிலே போட்டுருவோம். சமைச்ச பிறகு, முதல் வேலையா, கறிவேப்பிலையே தனியாக பிரிச்சு  எடுத்து எறிஞ்சுருவோம் இல்லீங்களா?

ஏழைங்களோட நிலைமயும் அப்படித் தான். ஏன்? பின் வரும் பக்கங்கள்ள  விவரமா பாத்துருவோம்.

கிரிகெட் ஆடரவுங்க, சினிமா நடிகருங்க அரசியல் வாதிகளைப் பற்றி - சுருக்கம்மா - பணக்காரனப் பற்றி எல்லோரும் புத்தகம் போடராங்க.

ஏழைங்களே பத்தி, அவங்க கஷ்டம் என்னா? அவங்களை எப்படி  நல்லா வாழ வைக்கலாம் என்று யாராவதும் ஒரே ஒரு புத்தகமானும் எழுதிருக்காங்களா?

இதுவரை யாரும் எழுதல்லே. இப்போ மிலிட்டரி  கந்த சாமியும். நடராஜன் சாருமா சேந்து இதே எழுதறோம்.

ஏழைகளே, கவலையை விட்டிருங்க. இதைச் சுத்தமா படித்து புரிந்து கொண்டு, உங்கள் ஏழ்மையை  ஓட ஓட விரட்டுங்க.

ராணுவத்திலே வேலை பாத்து, நாட்டுலே மூல முடுக்குலெல்லாம் வாழ்ந்திருக்கேன். பட்டப்படிப்பு எதுவும் படிக்கல்லே.  கதைகள், சரித்திரம் மட்டுமில்லே

செய்திகளில் வரக்கூடிய பல விசயங்களை, உதாரணமா நாட்டு நடப்பு, உள்ளூர் செய்தி, உலகச் செய்தி, பொருளாதாரம், நல்லது, கெட்டது என்று நிரைய படிச்சிருக்கேன். நாலு விசயம் தெரிஞ்சவங்களோட விவாதம் பண்ணுவேன்.

ஆனாலும் பெரிய படிப்பு படிச்சவனுக்கு தெரியாத பல விசயங்களே பளிச்சுன்னு சொல்வதிலே எனக்கு வரமாதிரி ஒரு திறமை, பட்டம் வாங்கினவன் பலருக்கும் இல்லேன்னு நடராஜன் சாரு அடிக்கடி சொல்லுவாரு.

நிரைய ஆளுங்க ஏழையா பிறந்துட்டு, தனக்கு நல்ல வாழ்வு வந்த உடனே ஏழையோட பிரச்சனை மறந்துடுவாங்க. அது கூட பரவாயில்லே, நம்ம மத்தியிலேயே வாழ்ந்து நம்மளையே ஏழையாக்குகிற மனுசங்களையும் தெரியும். கந்துவட்டி மீட்டர் வட்டிக்கு கடன் தருவது பிர்லாவோ அம்பானியோ இல்லை. நல்ல வாழ்வு வந்த சில முன்னாள் ஏழைகள்தான். ஒன்றும் அறியாத ஏழைகளை கெட்ட பணக்காரர்களுடைய அடிமையா மாத்துகிர வேலை எல்லாம் செய்கிறது யாரோட வேலை? வேகமா பணக்கானக துடிக்கிர ஓர் ஏழைதான்.

நான் அப்படி ஒரு ஆளு இல்லை. இப்போ மிலிட்டரி வேலை பாத்து ரிட்டயராகி பென்சன் வாங்கிட்டுருக்கேன். இப்ப நான் ஏழை இல்லேன்னு ஒதுங்கிற டைப் இல்லே.

ஏழைங்க வறுமைய தொலச்சிட்டு நல்லா வாழரது எப்படி என்று கண்டுபிடிக்கறதுலேயும், அதே செயல் படுத்தரதுலேயும் மும்முரமா இருக்கேன்.

ஏழைகளே, இந்த புத்தகத்துலே எல்லாத்தையும் புட்டு புட்டு வைதிருக்கிறோம். நல்லா படிச்சு மனசிலே வாங்கி, மறந்துடாம அதுபடி வாழறதுன்னு முடிவு செய்து விட்டால், உங்களோட வறுமை ஓடிடும். உங்க பலம் மற்றும் பலவீனம் எல்லாத்தையும் நீங்களே தெரிந்து கொள்ள உதவும்.

அந்த அறிவு இருக்கே, அது உங்களை பிறவியிலிருந்து

பிடிச்சிருக்குற ஏழ்மையை அறுத்து ஏறியவும், விடாமல் விரட்டும் கஷ்டதிலேருந்து விடுதலையும் கிடைக்க உதவும்.

ஏழ்மையைக் விரட்டறது ரொம்ப சுலபம் தான். ஆனா கொஞ்ச ஏழைங்கதான் ஏழ்மைய விரட்ட முயற்சி எடுக்கிறார்கள்.

அதிலேயும் கொஞ்சம் பேரு தப்பான வழிலே பணம் பண்ணப் போறாங்க. அப்புரமா ரொம்ப வேதனப் படராங்க. முதலில் நாலு காசு சேத்துட்டா தனக்கு அதிகமா மூளை இருக்கிறதா கணக்கு போடராங்க. அடிவாங்கி அவதிப்படும் வரை தவறான வழியிலே போறாங்க.

அதே சமையம் கொஞ்சம்பேரு அறிவைச் சேர்த்து, நல்ல குணமுள்ள மக்களுடன் கூடி, நல்ல வழிலே போயி, நல்லா வசதியா ஆயிடராங்க.

சும்மா இல்லே, பல உண்மைக் கதைகளை சொல்லி கருத்து மனசில பதிவதிற்கு உதாரணமாக சொல்லி, உங்க தலையிலே இந்தக் கந்தசாமி அண்ணன் ஏத்திடுவாருன்னு நம்புங்க.

ஆபத்தில்லாத வழிலே உங்கள் வாழ்க்கையில் மற்றும் பொருளாதாரத்தில் முன்னேற வழி சொல்லும் ஒரே ஒரு புத்தகம், இதுதாங்க.

கந்தசாமி சொல்ல,

நடராஜன் நாகரெத்தினம்.

அத்தியாயம் 01

# ஏழைகள் பலவிதம்

ராணுவம், பெரிய தொழிச்சாலைகள் இதில் எல்லாம் வேலேயிலே சேர்த்துக்கிறதுக்கு முன்பும், அதற்குப் பிறகும் நீண்ட பயிற்சிகள் கொடுப்பார்கள். ஏன் தெரியுமா?

எதையானும் சாதிக்க வேண்டுமென்றால், நாம, நெரய தெரிஞ்சுக்க வேண்டியதும், புரிஞ்சுக்க வேண்டியதும் இருக்கு. தேவையானதை எல்லாம் தெரிஞ்சுக்கிட்டு, புரிஞ்சுக்கிட்ட பிறகுதான் எந்த ஒரு காரியத்துலேயும் இறங்கணும். இல்லாவிட்டால் ஒண்ணுக்கு ஒண்ணு ஆகிவிடும்.

*அவல நெனச்சு உரல இடிச்சாப்புலேன்னு - ஒரு பழமொழி.*

அப்படி செஞ்சா, அவல் வராது. உரல்தான் உடையும், உரல்லே நெல்ல போட்டமா? நெல்லு சரியா, பதமா இருக்குதான்னு தெரிஞ்சுக்கணும். அதெல்லாம் சரியா தெரிஞ்சுக்கிட்டப் பிறகு உரலை இடிக்கலாம். அப்பதான் அவலு வரும் உரல் உடையாது. சரிதானா?

இப்போ ஏழ்மை என்றால் என்ன? ஏழ்மை யாருக்கெல்லாம் வரும். எதனால் வரும் என்று தெரிஞ்சுக்கிடலாம்.

அதன் பிறகு படிப்படியா எல்லாம் தெரிஞ்சுக்கிட்டு, ஏழ்மையை ஓட்டிவிடலாம். சரிதானா?

**ஏழை மனுசனுக்கு மட்டும் இல்லைய்யா.**

ஏழ்மை என்பது, மனுசனை மாத்திரமே வாட்டுற ஒரு பிரச்சனை இல்லை. பல நாடுகளக் கூட ஏழ்மை விடாது துரத்திடும்.

ஏழைங்க கஷ்டத்துக்கு சாமி தான் காரணமுன்னும், போன பிறவியில் செய்த தப்புதான் காரணமாக சொல்றாங்க.

உண்மை என்ன தெரியுமா? அறிவிலே குறைவு வந்த மனிதனை ஏழையாக்க அவர்களைவிட சிறிது அறிவு அதிகமானவங்க, எப்பவுமே சுத்தி சுத்தி வந்துக்கிட்டு இருக்காங்க.

சில கெட்ட மனுசங்க தான், பல மனுசங்களை ஏழையாக ஒரு காரணம். அப்படியே தான், சில பேராசை பிடித்த தலைவர்களை கொண்ட நாடுகள் தான், என்றைக்குமே, பல நாடுகள் ஏழ்மையிலே இருக்க முக்கிய காரணமாக இருக்குது.

அறிவில் குறைவு வந்த மனிதன் ஏழையாகிறான். அதுவும், அறிவு எவ்வளவு குறையுதோ, ஏழ்மை அவ்வளவு அதிகமாகும்.

இப்ப சொன்னத ஒரு மாதிரியா ஒப்புக் கொள்ளலாம். ஒரு நாடு ஏழையாகிறது எப்படி? நாட்டுக்கு அறிவு எங்கே இருக்கு?நாட்டுலே மூளை எங்கே இருக்கு? சிந்திக்கிறவன் கேட்டுவிடுவான்.

ஒரு நாட்டிலே அதிகப் படியான மக்கள் குறைந்த அறிவோட இருந்தா, அந்த நாடு அறிவில் குறைந்த நாடு. எந்த அளவுலே மக்கள் அறிவோடையும், அறிவில்லாமலும் இருக்காங்களோ அது நாட்டுடைய ஏழ்மை நிலைய தீர்மானிக்கும்.

இஸ்ரேல் - ஒரு சின்ன நாடுதான். ஒரே பாலைவனம், குடிக்க தண்ணிகூட இயற்கையா கிடைக்காது. சுத்திவர பல நாடுகள் அவங்க நாட்டோடு சண்டை போட்டுக்கிட்டே இருப்பாங்க. அவங்க விஞ்ஞானத்தில், விவசாயத்தில் ராணுவ தளவாடம் தயார் பண்ணுவதில் அமெரிக்காவைவிட எல்லாத்திலேயும் முதல் இடத்திலே இருக்காங்க.

சில பணக்கார நாடுங்கெல்லாம், மற்ற நாடுங்கள ஏழையா ஆக்குது. ஏழை நாட்டுலே தலைவர்களிலே சில நல்லவங்களும் இல்லாமல் இல்லை. ஆனால் அவங்க கொஞ்சம் பேரு தான். மீதப் பேரு பொல்லாதவனுங்க. அவுங்கவங்க தான், நாடும் மக்களும் ஏழ்மையா

போகிரதுக்கும் ஏழையாவே இருப்பதற்கும் காரணமா இருப்பாங்க.

நாம் மனுசங்களை ஏழைங்க, நடுத்தர மக்கள் மற்றும் பணக்காரன் அப்படின்னு பிரிக்கிறோம் இல்லையா? அப்படியே, நாடுகளையும், ஏழையான நாடு, வளர்ந்துகிட்டே வர நாடு, வளர்ந்துவிட்ட நாடு என்றெல்லாம் பிரிச்சுட்டாங்க.

இது இல்லாம வேற வழியாவும் பிரிக்கலாம். முன்னேறத்துக்கு முயற்சி பண்ணி தோத்துப் போன நாடு.முயற்சியே பண்ணாம தோத்துப் போன நாடுகள். இன்னமும், சில நூறு வருசத்துக்கு, முன்னேற வாய்ப்பே இல்லாத நாடுகள். முன்னேற்றத்துக்கு கனவு கூட இல்லாத நாடுகள் என்று பிரிச்சு, இந்த பட்டியலை நீட்டிகிட்டே போகலாம்.

**ஏழை நாட்டில் ஏழ்மை மிகவும் கொடியது.**

ஔவைப் பாட்டி, வெளிநாடு எதுக்கும் போகவில்லை. அதை அவங்க பாட்டுலே தெரிஞ்சுக்கலாம்.

வறுமை கொடியது அப்படின்னாங்க. சரிதான். அவங்களும் ஏழைங்கிர காரணத்தினால உணர்ந்து தெரிஞ்சுக்கிட்டு சரியா சொல்றங்க.

அதை விடக் கொடுமை இளமையிலே வறுமை, அப்படிங்கராரு. அதுவும் சரி தான்.

ஆனால், அவர் சொல்லாதது, *எல்லா வற்றையும் விட ரொம்பப் பெரிய கொடுமை ஏழைநாட்டிலே ஏழையாக பிறக்கறது தான்.*

சில வருசங்களா, சில ஏழைப் பிள்ளைகள் பெரிய இஞ்சினியர் படிப்பு படித்து விட்டு வெளிநாட்டுலே வேலை பார்கிறார்கள் இல்லியா. அவங்கதான்யா இதைச் சொல்றாங்க.

நம்ம நாட்டுலே மட்டுமில்லை, உலகத்துலே எல்லா நாட்டுலேயும், பணக்கார நாட்டுலெ கூட ஏழைங்க இருக் காங்களாம்.

ஆனால், வளந்த நாட்லே உள்ள ஏழைக்கும் நம்மைப் போல. வளந்துட்டிருக்கிறோம் என்று சொல்லிக்கிற நாடுகளுக்கும் ஏகப்பட்ட வித்தியாசம் இருக்குதாம்.

அதையும் என்ன எப்படி என்று பார்த்திடலாம். அெல்லாம் ஒரு மாதிரியா தெரிந்து கொண்டு, எப்படி ஏழ்மையை ஓட்டிடலாம் என்றும் பார்க்கலாம்.

மறந்திடாதீங்க, திரும்பவும் சொல்றென், மொதல்லே செ ால்லியது போல, எந்தக் காரியத்துலேம் ஜெயிக்கணும் என்றால், அதப்பத்தி முழுவது தெரிஞ்சுக்கிட்டு அப்புரம் குதிக்கணும்.

எடுத்தோமா கவுத்தோமான்னு காரியம் செய்தால். பல்டி அடிச்சிடுவோம்.

முதல் கட்டமாக ஏழ்மை என்றால் என்ன? ஏழைங்க யாரு? எத்தனை விதமான ஏழைங்க இருக்கிறாங்கன்னு கண்டு பிடிச்சுருவோம்.

எல்லா வியாதிக்கும் ஒரே மருந்து இருக்கா? இல்லையில்ல. அது போலத்தான், பல வித ஏழைங்களுக்கு பல விதமான பிரச்சனை. பலவிதமா வைத்தியம் சொல்லணும்.

**ஏழைகள் பலவிதம்**

மனுசனுக்கு மூன்று முக்கியமான தேவைகள் இருக்கு.

உயிர் வாழரத்துக்கு சாப்பாடு முக்கியம்.

குளூர், வெய்யில், மழை - இதில் இருந்து உடலை பத்திரமா வைத்துக் கொள்ளனும் இல்லியா? அதோட அம்மணமா திரிய முடியுமா? மானத்த காப்பாத்திகிறதுக்கும் உடை வேணும்.

பகல்லே உழைச்சுட்டு ராத்திரியாச்சுன்னா நிம்மதியா தூங்கணும். அதற்கு ஏதோ ஒரு வீடு.

இந்த அவசியத்த யாருமே தப்பு சொல்ல மாட்டாங்க இல்லியா? இப்ப பாருங்க

### ஏழை :

*வாழரதுக்கு தேவையான, மேலே சொன்ன மூணு அவசியங்களிலே ஒரு மனிதனுக்கு ஏதாவது ஒண்ணு குறைவு வந்தாக்க, அவரு ஒரு ஏழைன்னு சொல்லலாம்.*

### படு ஏழை :

மேலே சொன்ன மூன்று முக்கிய தேவைங்கள்ளே ஏதாவது இரண்டிற்கு குறைவு வந்தா, அவர் ஒரு படு ஏழை.

## பரம ஏழை:

அடிப்படைத் தேவை மூணுலேயும் குறைவு வந்த ஒருத்தரை பரம ஏழையாகவே நாம் சொல்லலாம்.

இப்படி யாராவது எழுதி வச்சிருக்காங்களா என்று கேட்கக் கூடாது. நம்ம மனசுக்குத் தெரியுது. நாமே செ ால்லிக்கிறோம்.

## தாற்காலிக ஏழைகள்:

இவங்க நாலாம் வகை ஏழைங்க. முதல் மூன்று வகை மக்களைப் போல இல்லாமல் மூன்று அடிப்படைத் தேவைக்கும் வேண்டிய ஒரு வருமானம், முன்னே பின்னே எப்படியாவது வந்து விடும்.

அறிவு குறைவினாலே இவர்கள், அடிக்கடி ஏழையாக மாறிடுவாங்க. இவர்களை நடுத்தர வருமானமுள்ள மக்கள்னு அரசாங்கம், பொருளாதார நிபுணருங்க எல்லாரும் சொல்லிருவாங்க.

யாரு இந்த நடுத்தர மக்கள்? இவர்களை நாம் எப்படி நடுத்தர மக்கள் என்று கண்டுபிடிக்றது? அது ரொம்ப ரொம்ப சுலபம்.

### இவர்களைக் கண்டு பிடிப்பது எப்படி?

நடுத்தர வருமானம் உள்ள இந்த மக்கள், படிச்ச வுங்கதான். ஆனாலும் அடிக்கடி பணம் காசு எல்லாம் இழந்துட்டு தெருவுக்கு வரப்ப, இவங்களே நடுத்தெரு

மக்களாயிடராங்க

சுமார் பத்து வருசம் முன்னாலே, ஒரு ஸ்கூட்டர், மொபட் போல இரண்டு சக்கர வண்டி ஏதாவது ஒன்று கட்டாயமாக வைத்திருப்பார்கள்.

காலையிலே எழுந்து அதைப் பளபளன்னு துடைச்சு வச்சூருவாங்க. ஆனால், வேலை வெட்டிக்கு பஸ்லேதான் போவாங்க.

இப்பெல்லாம் சில ஏழைங்க அந்தக் காலத்து மத்தியதர மக்கள் மாதிரி மாறிகிட்டு வராங்க. நல்லது தானே.

இந்தக் காலத்துலே நடுத்தர வருமானம் உள்ள மனுசங்க கடன் வாங்கியாவது ஒரு கார் வச்சிருப்பாங்க.

ஆனா அதில் பலர், அலுவலகத்திற்கு, ஸ்கூட்டரில் தான் போவாங்க.

பள்ளி மற்றும் கல்லூரி ஆசிரியர், அரசாங்கத்தில், வங்கியில் என்று பல துறையிலே வேலையில் இருப்பாங்க. சின்னதா ஒரு தொழிலோ, அல்லது சிறிய அளவில் ஒரு வியாபாரமோ செஞ்சிக்கிட்டு இருப்பாங்க.

ஆனா, தலையை அடகு வைத்தாவது, கடன் வாங்கி பிள்ளைகளை எஞ்சினியர், டாக்டர் வேலைக்குத் தேவையான படிப்பைத் தருவாங்க.

ஆங்கில நாளேடுகளைப் படிப்பாங்க. உள் நாட்டு மற்றும் உலக அரசியலை, பொருளாதாரத்தை, நியாயம் எது தர்மம் இது என்று தெரு மூலையில் நாலு பேரோட அலசு வாங்க. இவங்களுக்கு தெரியாதது எதுவுமே இல்லை என்று நினைக்கின்ற அளவுக்கு பேசுவாங்க. ஓட்டு போட போகமாட்டாங்க.

இத்தன விவரமானவங்க ஏமாறுவாங்களா? ஏமாறுவாங்க. இவங்களும் அக்கடி ஏழையாவதினால் இவங்களைப் பற்றியும் தெரிந்து கொள்ளனும்.

ஏழைகள் அறிவை சேர்த்து முன்னேறி ஒரு கால கட்டத்தில் அவர்களும் ஒரு நடுத்தர வருமானமுள்ள மக்களா மாறி

வரப்போ அவர்கள் செய்கிர அதே தவறை ஏழைங்க செய்யக் கூடாது இல்லையா? . அதுக்குதான். நடுத்தர மக்கள் ஏழையாவுறது எப்படி என்று பார்க்கலாம்.

**வளர்ந்த நாடுகளில் ஏழைகள்:**

வளர்ந்த நாடுகளில் பிச்சக்காரங்களைக் கூட, மரியாதையாக, (ஹோம்-லெஸ்) வீடில்லாதவங்கனு தான் சொல்லுவாங்களாம். இவனுக எப்படியாபட்ட மனிதர்கள் தெரியுமா?

வீடுகளை உடைத்து திருடுவது, கடைகளை, பாங்குகளை அப்பப்ப கொள்ளை அடிக்கறது, கொலைக் குற்றம் செய்வது போத மருந்து தின்னுவது, பொது இடத்தில் தகறாரு செய்வது, பிடிபட்டு ஜெயிலுக்குப் போவது. திரும்பி வந்து அதே குத்தம் செய்வது. இதுதான் இவங்க செய்வது.

இவங்களுக்கு செந்த வீடு மட்டும் தான் இல்லை. அவ்வளவுதான். இவனுக வாழுறத்துக்கு அருமையான பெறுரிய கட்டடம். ஷெல்டர்கள் என்று சொல்வார்கள்.

பெரிய தொழில் நிறுவனங்கள் இவர்களுக்கு இலவசமா பல பொருட்களைத் தருவார்கள்.

இவர்களை நன்றாக வாழ வைப்பது எப்படி என்று இணையதளத்தில் கோடிக் கணக்கிலே விவாதிக்கிறாங்க. திட்டங்கள் பல போடராங்களாம். அமெரிக்காவுக்கு போயி வேலை பார்த்துவிட்டு திரும்பி வந்த என் அண்ண மகன் சொல்கிறான்.

இவங்களுக்கு. சொந்தமா வீடு இல்லை, வாடகை கொடுக்க காசில்லே என்கிறது மட்டுந்தான் இவங்க குறை.

நமது நாட்டிலே, இந்த வகையிலே, பிச்சை எடுக்காம, தப்பு தண்டா பண்ணாம, நியாயமா உழைச்சுப் பிழைக்குற எத்தனையோ கோடி மக்கள் இருக்காங்க. ஒழுகாத ஒருவீடு இல்லாதவங்க, சின்ன ஓலைக் குடிசையிலே கூரை வீட்டுலே வாழரவங்க மட்டுமே எவ்வளவோ கோடி மக்கள் இருப்பாங்க.

ஓலைக் குடிசைகளை யாருமே, ஒரு வீடாகவே சொல்லக் கூடாது. இப்ப புரியுதா, ஔவைப் பாட்டி ஏன் சரியா ஏழையப் பத்தி முழுசா எழுதவில்லை என்று. அவங்க வெளிநாடு போகல்லே. அங்கே இருகிற ஏழைகளைப் பார்க வில்லை. பாத்திருந்தாங்கன்னா என்ன சொல்லிருப்பாங்க?

*இளமையில், ஒரு ஏழை நாட்டிலே ஏழையா பிறப்பதைப் போல கொடுமை இல்லேன்னு பாடிருப்பாங்க. அதோட விட்டுவிடுவாங்களா, ஏழைகளே, திருட்டுக் கப்பல்லே ஏறியாவது, திரைகடலோடி, அமெரிக்கா ஓடிருன்னு பாடிருப்பாங்க.*

நம்ம நாட்டுலே ஏழைகளைப் பற்றி கவலைப் பட யாராவது இருகாங்களா? யாருக்கும் தெரியாது. அப்படி இருந்தாலும் என்ன செய்வாங்க? கொஞ்சம் பேரு, கோவில் வாச ல்லே அன்னதானம் பண்றாங்க. திருவண்ணாமலையிலே பார்க்கலாம்.

(நம்ம நாட்லேயும் சமூக ஆர்வலர்கள் என்கின்ற அமைப்பெல்லாம் இருக்கு. ஏழைகள் பேரிலே வசூல் செய்து, அதுலே பிராடு பண்ணி ஏழைங்களுக்கு வருகிர பணத்தையும் விழுங்கும் மனிதர்களே அதிகம்).

வளந்த நாடுகளில் இலவசமாக ஏழைங்களுக்கு துணி மணிகள் யாரேனும் தந்து உதவ விரும்பினால், அதை டிரை-வாஷ் செய்து புதியது போல செய்து தரவேண்டும். நெஞ்சது, கிழிஞ்சது கிட்ட வரக்கூடாதாம்.

போதை மருந்துக்கு அடிமையாயிட்டு, அடிக்கடி குற்றம் செஞ்சுப்புட்டு, சிறையில் வாழ்றவனுகளுக்கே, இந்த ராஜ மரியாதை.

அரசாங்கம் இவர்களுக்காக அமைத்துத் தரும் ஷெல்டர்கள் நம்ம ஊர் நடுத்தர மக்களுக்குக்கூட அத்தனை வசதியான குடியிருப்பு இருக்காதாம்.

**ஏழ்மையின் காரணங்கள்**

### *1. நடுத்தர மக்கள், நடுதெருவுக்கு வருவது எப்படி?*

நடுத்தர வருமானம் உள்ளவங்க நல்லா படிச்சவங்கதான்.

பெரிய படிப்பு படிசவங்க எல்லாருக்குமே அறிவு வந்துடாதுன்னு இவர்களுடைய செயல்பாடுகளை ஓரளவு கவனித்தவர்களுக்கு, சுத்தமா தெரியவரும்.

**நடராஜன்: கந்தசாமி, அறிவப்பத்தி கொஞ்சம் விளக்கமா சொல்லுவீங்களா?**

கந்தசாமி: இப்போ, அறிவு இல்லாததுனாலே தான் மக்கள் ஏழையா ஆயிடராங்க எங்கிற விசயத்த சுத்தமா புரிய வச்சுருவோம்.

அப்புரம், அறிவு, ஆண்டவன் இரண்டயும் பாத்துருவோம். இல்லேன்னாக்க தெளிவு கிடைக்காதுங்க. இருந்தாலும் கொஞ்சம் சுருக்கமா இப்படி சொல்லலாம்.

அறிவுலே முதல் பாகம், உலகத்துலே, நம்மை சுத்தி என்ன என்ன இருக்குது, என்ன என்ன நடக்கிறது அப்படின்னு தெரிஞ்சுக்கிறது.

அடுத்த கட்டமா, அதில் இருந்து. நம்ம வாழ்க்கைக்கு தேவை இல்லாதது எல்லாத்தையும் மனசுலேந்து, தூக்கி எறிவது.

மூன்றாவது, பாக்கிய கெட்டியா மனசுலே பிடிச்சு வைப்பது. பிறகு பிடிச்சு வைத்ததை எப்படி உபயோகிக்கறது என்பது நான்காவது கட்டம். இந்த கட்டத்தில் அவசியமானது சிந்தனை அல்லது சிந்திப்பது என்பது இருப்பது பல பேருக்கு தெரிவதில்லை. பள்ளித்திட்டத்திலே. கல்லூரி படிப்பிலே மாணவர்களை சிந்திக்கிற திறமைய வளர்க்க ஏதும் இல்லேன்னு நடராஜ் சாரு சொல்வாரு. அது வந்து விட்டால் நாம் கூட இஸ்ரேல் மாதிரி ஒரு சக்தி வாய்ந்த ஒரு நாடாக மாறமுடியும். ஏழ்மை நாட்டைவிட்டு ஓடிவிடும் என்று அவரு நம்பரத்லே, நானும் நம்புகிறேன்.

இப்போ நாம முதல் கட்டத்துலே இருக்கோம். இத முடிச்சிட்டு அடுத்த மூன்று கட்டத்துக்கு போயிரலாம்.

அப்படி படிப்படியா சொன்னாதான், படிக்கிறவனுக்கு சு த்தமா மனசுலே ஏறிடும், இல்லியா?

அறிவுன்னா என்ன? நமக்கு அறிவு இருக்கா இல்லியா? இருந்தா எத்தன இருக்கு? அறிவை வளர்ப்பது எப்புடின்னு அப்புரம் எல்லாதையுமே சொல்லி விடுவோம். சரிதானா சார்।

நடராஜன்: ரொம்ப நல்லா திட்டம் போட்ருக்கீங்க. அப்படியே செஞ்சுடுவோம். இப்போ, நடுத்தர மக்கள் எப்படி நடுத்தெருவுக்கு வராங்க என்கிறதை சொல்லிட்டு வாங்க.

கந்தசாமி தொடர்கிறார்.

பட்டம் படிச்சதுனாலே, ஆங்கில செய்தித்தாள் படிச்ச தாலே, டீ வி செய்தி பார்கிறதுனால நாட்டுலே நடக்கிற நல்லது கெட்டது, தப்பு தண்டா எல்லாம் தெரிஞ்சு இருக்குணும் இல்லையா?

அதிக வட்டிக்கி ஆசை காட்டி அசலயே விழுங்கிட்டு போகிற பிளேடு பைனான்ஸ் கம்பெனி பத்தி எத்தனை செய்தி வந்திருக்கு.

அப்படியும் அங்கே கொண்டு போயி உழைத்த காசைப் போட்டு ஏமாந்தா படிச்சு என்ன பிரயோசனம்? செய்திய படிச்சு தெரிஞ்சு வைத்து என்ன பயன், சொல்லுங்க.

அது போதாதுன்னு. கருமாந்தரம் புடிச்ச ஸ்டாக மார்க்கெட்டுன்னு ஒண்ணு. எவன், எதுக்கு கண்டு புடிச்ச ானுகளோ தெரியல்லே. அப்பப்ப. இதிலெ காசு போட்டு மொட்டையான மனுசங்களுக்கு கணக்கே இல்லேங்க.

சிந்தனை என்பதை எப்படி விளக்கலாம்? ஒரு காரியம் செய்ய நினைக்கும் போது, அதைப் பற்றி படித்தை, கேட்டதை, மனதில் சேர்த்து வைத்த எல்லாவற்றையும் நினைவுக்கு கொண்டு வரவேண்டும். அதன் அடிப்படையில்

இப்ப நாம செய்ய நினைத்ததில் என்னென்ன விளைவுகள் வரலாம் என்று அலசி, அதன் பிறகு நாம் எடுக்கும் ஒரு முடிவில் தவறு எதுவும் வரக்கூடாது.

வேற விதமா சொன்னால், கற்றதை அன்றாட வாழ்க்கையில் இணைத்து சரியான, இழப்பில்லாத, முடிவுகளை எடுக்க உதவுவதை சிந்திக்கும் திறன் என்று சொல்லலாம்.

சிந்தனை செய்யத் தெரியாமல், தவறுகளை தவறாமல் செய்கின்ற மக்கள் நிறைய இருக்காங்க. இருக்கிறதை வச்சிட்டு நிம்மதியா வாழர வழி தேட மாட்டாங்க.

சூதாட்டத்தாலே ஒரு பாரதப்போரு நடந்ததுன்னு, மகா பாரதம் பாடத்திலெ படிச்சிருக்காங்க. டீ வீ லேயும் பார்த்தாச்சு. சூதாட்டம்னா என்ன? ஆட்டத்துலே சூது வைக்கிறதால தானே அப்படி ஒரு பேரு.

எவனோ எங்கேயோ கிரிக்கட் ஆடினா, இவன் அதுமேல சூதாடுவான். சூது நடத்தர பார்ட்டி லேசுப்பட்டவனுக இல்ல. கிரிக்கட் விளையாடுர பசங்களுக்கு காசு கொடுத்து ஆட்டத்த இஷ்டப்படி திருப்பி கிரிக்கெட் விளையாட்டையே ஒரு கேலிக் கூத்தாக்கிட்டாங்க.

சமீபத்திலே, மூணு பாக்கிஸ்தான் ஆட்டக்காரங்களை இங்கிலாந்துலே ஜெயில்ல பிடிச்சு போட்டுடாங்க இல்லே. அதைக் கூட மனசுலே வச்சுக்காம டி வி முன்னாலே உக்கார்ந்து, சின்னவன் பெரியவன்னு இல்லாமே, மணிக்கணக்கா மேட்சு பாப்பாங்க. அது மேலே பெட் கட்டுவானுக.

அடுத்தாப்பல, போலிச் சாமியாருங்க சமாசாரம். அப்பப்ப தமிழ் நாட்லே இவங்க தல காட்றது யார்னாலே? சாமியார் கிட்டே சக்தி ஏதானு இருந்தா அவங்க நம்மள சுரண்ட ஏன் வரணும்?

அவனுகளுக்கு ஜால்ரா போடர கூட்டாளிங்க வச்சு க்கிட்டு, இந்த சாமியாருக்கு இந்த சக்தி இருக்கு, அந்த சக்தி இருக்கு என்று விளம்பரம் வேற. தங்கத்தே பூசையிலெ வச்சு இரட்டிப்பா பண்ணினாருன்னு, இரும்ப

தங்கமா மாத்திட்டாரு என்று ரீல் விடுவாங்க. இப்ப இண்டர்னெட்லே வேற இதற்கு எல்லாம் விளம்பரம். இத எல்லாமா நம்பரது.?

அறிவு வேணாம். சாமியாரும் கூட்டாளிங்களும் இருக்கிற எல்லாத்தையும் சுருட்டிக்கிட்டு ராவோட ராவா எத்தனை தடவை காணாப் போயிருக்காங்க. இருக்கிற காசை எல்லாம் இழந்துட்டு இவங்க போலீஸ் ஸ்டேஷன்லே கால் கடுக்க நிப்பானுக. யானை வாய்க்குள்ள போன கரும்பு யாருக்காவது திரும்ப கிடச்சிருக்கா.

இதெல்லாம் பேராசயாலன்னு சொல்லுவாங்க. அறிவிருந்தா ஆசையும் ஓடிரும், பேராசயும் ஓடிருமய்யா. இது சுத்தமா, அறிவில்லத் தனத்தோட விளைவு தான் ஐயா.

அப்துல் கலாம் ஐய்யா கனவு காணுன்னா, உழைக்காமல், ராவேடா ராவா பணக்காரனாவதை பத்தியா கணவு காணச் சொன்னாரு. லூசுபசங்க, தப்பான கனவுல்ல காண் கிறார்கள்.

வெளி நாட்லே போயி பணக்காரனாவரது இவங்க காண்கிற பல கனவுல ஒண்ணு. ஔவைப் பாட்டி சொன்ன யோசனைதான். ஆனான் எதிலும் விழிப்பு வேணும். அதுக்கு அறிவு வேணும். ஏஜெண்டுகளில் ரொம்பப்பேரு மோசமான ஆளுங்க.

ஏழைகளை ஏமாத்தி பணத்தை வாங்கிட்டு காணாம போயிருவாங்க. அவங்களுக்கு தெரிஞ்ச ஆளுங்கள தயார் பண்ணி, அவங்க மூலமா, இவங்கதான் என் மச்சான் ஒருத்தரை மலேசியா அனுபிச்சாரு. அடுத்த ஊட்டுக்காரனை ஆப்பிரிக்கா அனுபினாருன்னு பொய்யெல்லம் சொல்லி நம்மை நம்ப வைத்துடுவாங்க. சில பேரு காசை வாங்கிட்டு அப்போ இப்போன்னு இழுக்கடிச்சுட்டு காசோட காணாமல் போயிடுவாங்க.

அது கூட பரவாயில்லெ, படிக்காதவங்க பல ஆளுங்களை பொய் பத்திரங்கள தயார் பண்ணி தப்பான நாட்டுக்கு அனுப்பிடராங்க. அங்கே அவங்கள ஜெயில்லே போட்டு

சித்ரவதை பண்ணி, தப்பிச்சோம் பிழைச்சோமின்னு நாட்டுக்கு திரும்பரத்துக்குள்ளே, சில வருசம் ஓடிரும். பல ஆயிரம் செலவிலே போயிடும்.

அதுமட்டுமில்லாம உடம்புலேயும் மனசுலேயும் வலி, சொந்த பந்தத்துக்கு மன உளச்சல். எத்தனை தொல்லை. இதல்லாம் வேணுமா?

இப்பத்தான் ஒண்ணு ரண்டு வருசம் முந்தி இராக் மேல அமெரிக்கவும் அவங்க கூட்டாளிகளும் படை எடுதாங்க. அவனுகளுக்கு அங்க மிலிட்டரி வண்டி ஓட்ட உள்ளூர்க்காரன் வரமாட்டான். வெளியூர்க் காரன் மிலிட்டரி வண்டிய ஓட்டினா உள்ளூர்காரன் பிடிச்சு சுட்டு விடுவான். ஏஜண்டுங்கள்ளாம், உண்மையைச் சொல்லாமல், வண்டி ஓட்டத் தெரிஞ்ச ஆளுங்களை வளை குடா நாடுகளுக்கு அனுப்பரதா சொல்லி இந்தியாலேருந்து அனுப்பிடாங்க.

தீர விசாரிக்க வேணாம்? இவங்க எங்கே அனுப்பரானுங்க. முன்னாடி எவன் எவனயெல்லம் அனுப்பிருக்கானுக. அவங்க இப்போ எங்கே வேல செய்ராங்க, அவங்களோட பேசி தெரிஞ்சுக்க வேண்டாமா? இப்புடியா, விளக்குலே விட்டில் பூச்சிங்க மாதிரி விழுந்து சாவரது? பெரிய தப்பு செய்கிறவங்களை நம்ம நாட்லே கடுமையா தண்டிச்ச் சரித்திரம் இருக்கா? அதுனால நாம தான் எச்சரிக்கையா இருக்கணும்..

**காலியான பெருங்காய டப்பா:க்கள்:**

முத்துரையா முடிஞ்சுக்க மூணு பாயிண்ட் சொல்லிடரேன்.

நேத்துங்கறது, போய்விட்டது. அதுலேருந்து நல்லது கெட்டது எதுன்னு நம்ம அறிவுலே சேத்துட்டு, பாக்கிய மறந்து விடனும். ஏன்னா போன காலம் திரும்பி வராது.

நாளை என்பது இன்னமும் வரவில்லை. நாளைய பொழுத் நாளை தினம் வந்ததும் பார்த்து கொள்ளலாம். நாளைய தேவைய இன்றைக்கு தயார் பண்ணிக்கலாம். ஆனால் அதைப் பற்றி இன்றைக்கே கவலப்படாதே.

நேற்றுவரை கிடைத்த அறிவை இன்றைக்கு சுத்தமா

பயன் படுத்து. வாழ்க்கை சுகம்மா இருக்கும். வாழ்க்கை என்கிற வண்டி ஜல்லுனு ஓடும். இதை ஏன் சொல்ல வந்தேன்னாக்க. ஏழைகளில் ஒரு வித்தியாசமான வகை ஆளுங்க நேத்து நெனப்புல இன்றைய தினத்தை ஓட்டிகிறார்கள். இவங்க அஞ்சாம் வகை ஏழைங்க.

இந்த மக்களப்பத்தி சொல்லரப்ப பெருங்காய டப்பான்னு சொல்றது சரிதான்.

ஏனென்றால், பெருங்காயம் டப்பாவிற்கு ஒரு சிறப்பு உண்டு. காலியான பல நாளுக்கு அப்புரம் கூட அதிலே பெருங்காய வாசனை, கும்முன்னு அடிக்கும்.

சில மனுசங்க பாத்தாக, பேசரப்போ கவனிச்சு பாத்தாக்கே இவனுக ரொம்ப வசதியான ஆளுன்னு நினைக்கத் தோணும். ஆனாக்க, அவங்க மொட்டையாகி ரொம்ப வரு சங்க ஓடிருக்கும். அப்ப அவங்க காலியான பெருங்காய டப்பா மாதிரிதான், இல்லியா?

## அத்தியாயம் 02

# ஏழைகளில் பலர், ஏழைகளாவே வாழ்ந்து சாவத்துக்கு பொருப்பு யாராயிருக்கும்?

**(1) ஏழைகளோட அறியாமைதான் மூதல், முக்கிய காரணம்.**

ஆமை நுழைந்த வீடும், அமீனா நுழைந்த வீடும் உருப் படாதுன்னு சொல்லுவாங்க. அமீனா என்றால் கோர்ட்டுலே வேலை செய்கிறவர். அவர் நம்ம வீட்டுக்கு வருகிறார் என்றால், நாம் எதோ சட்டத்தோட மோதுகின்றோம் என்று தெரியும். அதிலே நேரம், காசு எல்லாம் விரையம் ஆகிவிடும். புரிந்து கொள்ளலாம்.

அந்த ஆமைங்கிறது, மெதுவா போகுமே, அது இல்லங்க. அறியாமை என்கிறோம் இல்லையா. அதுதான். அந்த ஆமை மட்டும் நுழைந்துவிட்டால், அதோட குட்டிங்கள்ளாம் வரியையா ஒண்ணு பின்னாடி ஒண்ணு வந்திடும். குட்டிஙக யாரு தெரியுமா? பொறமை, இயலாமை, ஆற்றாமை அப்புடின்னு சொல்லிக்கிட்டே போகலாம்.

யாரோட அறியாமைன்னு கேக்கரீங்க? மொதல்ல ஏழை மக்களோட அறியாமை. அதுக்கப்புரம், தலைவருங்க, அதிகாரிங்கள்ன்னு வரிசையா, நெரையபேர சொல்லலாம்.

(2) **பொருளாதார நிபுணர்கள்.** வசதியான வீட்டுலே, புள்ளைங்கள வளர்ந்த நாட்டுக்கு படிக்கறதுக்கு அனுப்பறாங்க. படிப்பு என்னஙக, காசு ரொம்ப இருந்தா, காலெயிலே காப்பி குடிக்க அமெரிக்கா, மத்தியானம் சோறு தின்ன சிங்கப்பூரு அப்படின்னு பறக்கலாம் இல்லையா. வளந்த நாடுகள்ளே போயி திரும்பின பணக்கார வீட்டு

பிள்ளைகள் பொருளாதாரம் படிக்கராங்க. திரும்பி வந்தாக்க, அவங்களப் பிடித்து, ஏழை நாடுகள்ளே நடக்கிற அரசாங்கத்துக்குத் திட்டம் போட நியமிச்சுடுராங்க.

இவங்களுக்கு ஏழைநாட்டிலே வாழற ஏழ்மையைப் பத்தித் தெரியருத்துக்கு நியாயமில்லே. இது எப்புடின்னாக்க, ஏரோப்பிளேனுக்கான உதிரி பாகத்த வச்சு சைக்கிள சரிபண்ண முடியுமா?

பிரான்ஸ் நாட்லே, அப்போ ராஜாக்கள் ஆண்டுக்கிட்டிருந்த காலத்துலே ஒரு தடவை கடும் பஞ்சம் வந்துச்சாம். ராஜா-ராணிகிட்டே போயி, மக்கள் ரொட்டி இல்லாம அவதிப்படராங்கன்னு ம் 2 சொன்னாராம். அப்ப ராணியம்மா, சொல்லிச்சாம் ரொட்டி இல்லாட்ட என்ன கேக்கு சாப்பிடச் சொல்லுங்கன்னிச்சாம். (நம்ம ஊர்ல, சோறு கிடக்காம மக்கள் தவிக்கராங்கன்னாக்க, சரி பாவாயில்லே எல்லாரையும் இனிமே சர்க்கரைப் பொங்கலு சாப்பிடுங்கன்னு, சொன்னா எப்படி).

நம்ம தலவர்கள், மந்திரிகள் நிபுணருங்க எல்லோரும் பிரான்ஸ் ராணிமாதிரிதான்.

ஏழ்மையின்னா என்னன்னு புரிஞ்சுக்காத நிபுணருங்க மந்திரிங்க எல்லோரும், நாட்டோட உற்பத்தி ஒசந்திருச்சு ஏற்றுமதி ஏகப்பட்டதாயிருச்சு, ஸ்டாக் மார்க்கெட்டு பொங்கி வருது அப்புடீ இப்புடீன்னு ஏதேதோ நம்பர்கள் காமிப்பாங்க.

கண்ணு முன்னாலே சோத்துக்கு இல்லாமே சாவரனப் பத்தி இவங்களுக்கு புரியாது. தெரியாது. கார்லே உக்கந்து ஏசி போட்டுக்குணு கதவு கண்ணாடிய இழுத்து உட்டா வறுமை கண்ணுலே எப்படி படும்? பட்டினிலே சாவுரவன் எங்கேயும் இல்லியேம்பாங்க. அவங்களைச் சொல்லி என்ன குத்தம்.

ஒரு மத்திய மந்திரி, டி விலே பேசரப்ப பாராளுமன்ற தேர்தலுக்கு, ஒரு ஆளு போட்டியிட 25 கோடி ரூபா பத்தாதுன்னாரு. அவ்வளவு செலவழிச்சு ஒரு ஏம்.பி

ஆனாக்க  மந்திரி பதவி கெடச்சுரும். ஆகாயத்துலே பறந்து ஏசி கார்லே ஓசிலே போகலாம். ஆனாக்க இந்த நிபுணருங்களும், மந்திரிகளும்  வயிறு காஞ்சு சாகிற ஏழையப் பத்தி என்னிக்கி புரிஞ்சுப்பாங்க?

## (3). பொருளாதாரக் கொள்கைகள்

**ஏழ்மையை  நியாயப் படுத்துகிற மாதிரி, ஒரு பொருளாதார கல்வி.** காலம் காலமாக, உலகம் பூரா, இப்படிப்பட்ட பொருளாதார நிபுணர்கள்  எழுதி, வருங்கால பொருளாதாரம் படிக்குற மாணவங்க  படிச்சு அதுல, ஒரு அநியாயத்தே நியாயமா பண்ணிட்டானுக. எந்த அநியாயத்தையும் அச்சடிச்சு புத்தகமா போட்டுட்டா அனியாயம், நியாயமாயிருமா?

எந்த ஒரு நாட்டை எடுத்துக்கிட்டாலும் அதன்  80 சதம் செல்வம்,  அந்நாட்டின் 20 சதவிகித மனிதர்கள் மாத்திரமே அனுபவிக்கிறாங்களாம்.

அதாவது பெரும்பான்மை (80 சதம்) மக்கள்  மீதி உள்ள 20 சதம் செல்வத்துலே மாத்திரமே பகிர்ந்துக்குறாங்களாம்.

இப்படி ஒரு இருபது - எண்பது என்ற விதப் பிரிவினை உண்மையானால் கூட ஒரு மாதிரி சகிச்சுக்கிடலாம்.

உண்மைலே பல நாடுங்கள்லே, 1 சதமானத்துக்கும் குறவான மக்கள், அவங்க நாட்டோட 99 சதமானத்துக்கும் அதிகமான செல்வத்தை அனுபவிக்கிறாங்க எங்கிறதுதான் உண்மை.

பல கீழைநாடுங்க மற்றும் பல ஆப்பிரிக்க நாடுகள்லே, ஆட்சில இருக்கரவங்க நாட்டு வளங்களை வளர்ந்த நாடுகள் சுரண்ட  உதவுகிறார்கள். அதுலெ தானும் கமிச ன் அடிச்சு பாக்கி நாட்டு பாங்குகளிலே சேத்துடராங்க. இப்படியே அவங்க நாட்டுலே உள்ள மக்களைப் பசி, பிணி அறியாமைன்னு  ஏழ்மையின் எல்லை வரை கொண்டு போகிற கொடுமைய்யா, கொடுமை.

மனுசன் நல்லா வாழனுமின்னா பொருள் ஆதாரம் இருக்கணும். ஒத்துக்கிடலாம்.

பொருளாதாரம் வளந்துடிச்சு, நம்ம நாடு சீக்கிறமே ஒரு வல்லரசு நாடு ஆகப்போகுதுங்கிறாங்க. அப்புடின்னா, நம்ம நாடு அமெரிக்காமாதிரி ஆயிடும் போல இருக்கு. அப்புடின்னா, நம்ம நாட்டு ஏழைங்கள பசி தின்னுடாது. அப்புடித்தானே? நம்ம நாட்டுக்கு நெரய அமெரிக்காகாரங்க காசு வருதாம். நம்ம நாட்டுலே பண்ணின காரெல்லாம் பணக்கார நாட்டுலே வாங்கி ஓட்டுரானுகளாம். வெளிநாட்டுக்காரங்க நம்ம ஊர்லே தொழில் தொடங்குராங்களாம்.

எல்லாம் கேக்கறத்துக்கு நல்லா இருக்குல்லே. ஆனாக்க இந்த காசெல்லாம் எங்கே போகுது? நாட்டுலே ஏழைங்க இன்னுமும் ஏன் பட்டினியாலே சாவுராங்க, வியாதீல ஏன் சாவுராங்க. சுகாதாரம் சுத்தமா இல்லாத இடத்துலேயே ஏன் வாழ்ந்து சாவராங்க. இந்த காசெல்லாம் வெளி நாட்டுக்கு திருட்டுத்தனமா ஓடிடுதாம்.

அதெல்லாம் திருப்பி கொண்டாங்கன்னு வடக்கே ஒரு யோகா சொல்லித்தர சாமியாரு, ஒரு ஏழை விவச ாயியோட பிள்ளையாம், ஒரேடியா குதிச்சுக்கிடிருக்காரு. கவர்மெண்டுக்காரனுக அவரை ஒரு தினுசா கவனிச்சு ட்டானுகளாம். டி வி லே நிரைய செய்தி வந்திச்சு. சினிவாக் காட்டினாங்க.

வேற ஒரு வயசானவரு, நம்ம ஊர்லே அண்ணா இருந்தாரில்லே, அதேபோல இவரு வடக்கே இருக்கிற அண்ணா போல இருக்கு.

ஏழைங்களை லஞ்ச ஊழல் அதிகம பாதிக்குது. அதனால நல்ல சட்டமா போடுன்னாக்க, இந்த கவர்மெண்டுக் காரனுக அவரை ரொம்ப லொள்ளு பண்றானுகளாம்.

வடனாட்லே அவருக்கு மக்கள் ரொம்ப ஆதரவுதராங்களாம். பல தலைவர்கள் ஏழைங்க பேர சொல்லியே இத்தன நாளா எல்லாரையு, ஏமாத்திட்டு இருந்தாங்களா? இந்த வட நாட்டு

அண்ணா, ஏழைங்களை முழிக்க வைத்ததாலே இவரு மேலேயும், அவருக்கு ஒத்தாச பண்ற எல்லாருமேலேயும் பொய்யா பிராசாரம் பண்ணுராங்கன்னும், பொய்யா கேசு போடராங்கன்னு செய்தி வந்துக்கிட்டிருக்கு. வயசான வடநாட்டு அண்ணா போராடரராம். அவரு காந்தியோட சீடராம். காந்தி மாதிரியே அமைதியா, உண்ணாவிரதம் இருந்து போராடரராம்.

இது எல்லாம் எத்தன நாளக்கி? ஏழையெல்லாம் இப்போ டி வி பாக்கராங்க, செய்தித்தாள் படிக்கராங்கள்ளே. வர வர இந்த விசயம் எல்லாம் புரிஞ்சுக்கறாங்க. வர எலக்சன் எல்லாம் கவனிங்க. தப்பு பண்றவங்கள, ஓரங்கட்டிருவாங்க.

காந்தி ஒரு நல்ல மனிசன் எத்தன தடவ வெள்ளக்காரனுக அவர ஜெயில்லே போட்டானுக. எத்தன தடவ அவுரு உண்ணாவிரதம் இருந்தாரு. கடைசிலே ஜெயிச்சாரில்ல.

இந்தக் காந்தியும் ஜெயிச்சு ஏழைங்களே நல்லா வாழவைப் பாருன்னு நம்பலாம். அதுனால ஆணடவனே அவருக்ஜ நேறய ஆயுசும், ஆரோக்கியமும் குடுன்னு நான் சாமியை வேண்டிக்கிட்டேங்க.

நம்ம நாட்டுலே இந்த பொருளாதார நிபுணருங்க இருக்கனுங்களெ அவங்களப் பத்தி தெரிஞ்சுக்கிட்டா, நம்ம நாட்லே ஏழைங்க கதி ஏன் மாறல்லேன்னு புரிஞ்சு போயிரும்.

வளமாயிருக்கர நாட்டுலே ஏழைங்க குறைவா இருகிறது நமக்கு தெரியுமில்லே. அவங்க நாட்டுலேயே பொருளாதாரம் படிச்சாக்க நம்ம ஊர் ஏழைங்களப்பத்தி அவங்களுக்கு எப்புடி புரியுமைய்யா? இவங்களைப் போயி, திட்டம் போடறத்துக்கு அசாங்கத்துலே வச்சிருக்காங்க. அப்ப, என்ன பிரயோசனம் வரும்.

ஏழை நாடுங்கள்ளே, பொருளாதார நிபுணருங்க நம்ம நாடு முன்னேற்றம் ஆயிப்புட்டோமுன்னு பேசிக்கிட்டு போயிடனானுக. இல்லைங்கல்லே.

ஒரு காலத்துலே ஸ்கூட்டர் வச்சிருந்தவன்  கார் வாங்கி ஓட்ரான். ஒரு கார் வச்சிருந்தவன்  ரண்டுகார் நாலு காரு வாங்கிப்புட்டு ஒருக்கார்லே போறான்.

அன்னிக்கு பாங்குலே பணம் வச்சிருந்தவன் இன்னிக்கி வெளிநாட்டு பாங்குலே பணம் வச்சிருக்கான்.

ஆனாக்கே பசி, நோவுன்னு வருசம் வருசமா வாழ்ந்திட்டிருக்கிற ஏழை மாத்திரம் அப்படியே பட்டினிலே சாவரான், கடன் தொல்லையிலே தற்கொல பண்ணிக்கிட்டான் அந்த நிலை மாத்திரம் மாறவே இல்லை.

ஏழ நாட்டுக்கு ஏழைகளோட சாபம், மக்கள் தலைவருங்க, திட்டம் போடரவனுங்க எல்லோருக்கும் பசின்னா என்னன்னு தெரியாதவனுங்க. இதோ அடுத்த பத்து வருத்துலே ஏழ்மை ஓடீரும்னு அப்பப்ப அறிக்கை விடுவானுக. அவ்வளவுதான். அப்புரம் மறந்துடுவாங்க. திருப்பவும் அதுமாதிரி ஒரு கெடு வச்சிட்டு திரும்பவும் மறந்திடுவாங்க.

ஏழைங்க என்னத்தே பண்ணுவாங்க?

எல்லொரும் தவறாம ஓட்டுப் போடனும்பாங்க? அன்னித் தேதிக்கி கட்சிக்காரனுக ஒவ்வொரு ஓட்டுக்கு இத்தன நூறு, இல்ல இத்தன ஆயிரம்முன்னு தராங்கள்ளே, அது மட்டும்தான்யா ஏழைக்கு  ஜனநாயத்திலே கிடைக்கிற பலன்.

கொஞ்சம் நாளக்கி போஸ்டர் ஓட்டுற வேலை, கட்சிக்காரன் பின்னாலே கூட்டமா கொடி பிடிச்சுக்கிட்டு ஊர்வலம் போரதுன்னு காசு கொளும் தருவாங்க.

ஏழைங்ககிட்ட ஒரு நல்ல குணம். காசு வாங்கிட்டான்னா, தப்பாமே அந்தக் கட்சிக்காரனுக்கு ஓட்டு போட்ருவான். படிச்சவனுக கிட்டே, நடுத்தரமா வாழ்ந்திட்டுருக்கனுகள்ளே அவனுகளுக்கு ஓட்டுப் போட காசு குடுத்தா, குடுத்தவனுகளுக்கு போட மாட்டனுக. தப்பித் தவறி ஓட்டுப்போடற எடத்துக்கு வந்தாக்க, அவனுக்கு பிடிச்ச

வனுக்கு ஓட்டு போட்டுட்டு ஓடீருவான்ருவாங்க. அதுனாலே தான் கட்சிக்காரங்க நடுத்தர மக்களை எப்பவும் கண்டுகிறதில்லே.

## புதிசா கண்டு பிடிசிருக்காங்க

ஒரு நாட்டில் மக்கள் தொகை அதிகமாயிருச்சின்னா ஒவ்வொரு ஏழைக்கும் கிடைக்கின்ற சோறுகூடக் குறையும். அதுனால ஏழைங்க குத்தம் பண்ணினாத்தான் வாழலாங்கர நிலமை வந்துரும். அதுனாலே, வசதியா இருக்கரவனுக்கு ஆபத்து வந்துரும்.

அதாவது ஏழைகள் செல்வந்தராகரத்துக்கு கனவு காணுவதை கொஞ்சம் தள்ளி வைக்கணும். அப்பத்தான் ஏழைங்க கவனம் அடுத்துள்ள மத்தியதரத்தை நோக்கி திருப்புவாங்க. அது ஒரு உண்மைதான். ஏழைங்க வயிறுகாயாம இருந்தா சரிதானே?

## அத்தியாயம் 03

# சில பிரபலமான ஏழைகள்.

டாட்டாவ, பிர்லாவ தெரியாதவங்கூட பாரதியாரையும் ஒளவையாரையும் தெரிஞ்சு வச்சிருப்பாங்க. இவங்க ரெண்டு பேருக்கும் நிறைய ஒத்துமை இருக்கு. ராமலிங்க வள்ளலாரு கருணையிலே ஒரு கடல். மனிதன் மட்டுமில்லே, அசையிர உயிரு அசயாத உயிருங்கன்னு எல்லாம் பாகுபாடில்லாமல். அவை அடையும் வேதனைகளைத் தாங்காதவரு. சாதிய ஒழின்னாரா. அதுனால அவரையே விலாசம் தெரியாம செய்து விட்டாங்க.

இந்த மூணு பேருங்களும் நல்லா பாட்டு எழுதிருக்காங்க.

பசி, வறுமை எல்லாமே அனுபவிச்சு தெரிந்து கொண்டவர்கள்.

இவங்களைத் தெரியாத முண்டங்களும் ஒண்ணு ரெண்டு இருக்கலாம். இல்லை என்று சொல்லவில்லை.



## மகாகவி சுப்பிரமனிய பாரதி

நாடு விடுதலை அடஞ்ச புதிசுலே தலைவருங்கள்ளாம் அவருடைய பிறந்த நாள் அன்று அவருடைய போட்டோ படத்துக்கு மாலை போட்டு கொண்டாடினார்கள்.

இப்போ மொத்தமா கழட்டி விட்டு விட்டார்கள். ஏழைகளைப் பற்றி, அவர்கள் அடையும் அவதியப் பற்றி பாடினாரில்லே. நம்ம நாட்டுலே மட்டுமில்லே இந்த உலகத்துலே எந்த ஒருத்தருக்கும் சாப்பிட சோறு இல்லை என்றால், உலகத்தையே அழிச்சிடலாம் என்றார் பாரதி. இப்ப அவர் உயிரோட இருந்தா, நக்ஸலைட்டுக்கு உடந்தயா இருக்கார் என்று பிடிச்சு ஜெயில்லே போட்டுருவாங்க.

கோடிக் கணக்குலே அரிசி கோதுமை எல்லாம் சரியா பாதுக்காக்கப்படாமே மழையிலே நனைஞ்சு புழுத்து நாசமாப்போகுதுன்னு செய்திலே சொல்றாங்க.

ஒரு பக்கத்துலே சோறு இல்லாம ஏழைங்க சாவுராங்க. உச்ச நீதி மன்றத்துலே இருக்குர நீதிபதிங்க, உபரியா இருக்குற தானியத்தே பட்டினியால சாவுர ஏழைங்களுக்கு குடுன்னு உத்தரவு போட்டா, சில மந்திரிங்க, நீதிபதிங்கள்ளாம், இதுலே தலையிடக் கூடாது அப்படின்னு சொல்ராங்களாம். இதுவும் செய்திதாள்ளே வந்துது. இப்படி பட்ட மந்திரிகள் எப்பவாச்சும் பாரதியார கண்டுக்குவாங்களா?

தலைவருங்க, ஓட்டுப் போடர முன்னாடி ஏழைங்களே பத்தி கூட்டம் போட்டு உருகுவாங்க. ஒரு படு ஏழையா ஒருத்தரை தேதிப் பிடித்து, அவர் வீட்டிலே, டீ வி கேமரா முன்னாலே சோறு தின்னு, தூங்கிவிட்டு போயிடுவாங்க. அப்புரம் அடுத்த எலக்ஷன் வரை எல்லாத்த்தையுமே மறந்துடுவாங்க. இவங்களா ஏழைக்கோசம் உருகின ஒரு ஏழைய, பாரதியாரை நெனசுப்பாங்க.

அவரு தேச பக்தி என்ன? கடவுள் பேர்லெ பாடின பாட்டு என்ன, அருமைங்க.

வாழ்ந்த காலத்தில் பாரதி ஒரு படு ஏழை. அவரும்,

அவருடைய பெண்டாட்டி புள்ளங்க பட்டினியா வாழ்ந்த நாளுங்க தான் அதிகமாம், இது நான் சொல்லலே அவருடைய வரலாறு நமக்கு சொல்லுது.

படிச்சவரு, புத்தி உள்ளவரு, தயாள குணம் கொண்டவரு பக்திமான். அதை எல்லாம் வச்சுக்கிட்டும் ஏழையாவே வாழ்ந்தாரு.

நடராஜன் சார் ஒரு சமயம் விளக்கமா சொன்னாரு. நமக்கு ரொம்ப அறிவு வளந்துட்டா, நாமளே விரும்பி ஏழையாயிடுவோம், நல்லவிதமா பல சாமியாரு இருந்தாங்க. ராம கிருஷ்ண பரஹம்சரு, ரமணரு, சேசாத்திரி ஸ்வாமி, எத்தனயோ சித்தருங்க. இவங்கள்ளாம் இப்ப இருக்கிர சாமியார்களப் போல மாமியாரு தேடர சாமியார் ரகமில்லே.

ஏழைக்கு மாத்திரமே இருக்குற இரக்கம், பெரிய மனசு பாரதிக்கு மாத்திரம் இருக்காதா என்ன? பசிக்குதுன்னு அடுத்த வீட்டுலே மனைவி கடன் வாங்கி வச்சிருந்த அரிசியைத் தரையில் கொட்டி அதை குருவிகள் கூட்டமா சாப்பிடுவதைப் பாத்து சந்தோசப்பட்டு பாடின மனுச னய்யா. இவரு மனுசன் பசிய மட்டுமில்லே மத்த உசிருங்களைப் பத்தியும் தெரிஞ்சு மனசு உருகுர ஆளு சாதாரண ஆளா? அவர நினக்க, அவர கொண்டாடாம உட்டுட்டாங்கய்யா, மக்களும் சரி, தலைவருங்களும் சரி.

வள்ளலாருன்னு ஒரு மகான் வாழ்ந்த பூமிய்யா இது. அவரும் ஏழைங்க பசியால வாடுனாக்க தாங்காதவரு. அவரு ரொம்ப நாளக்கு ஒருக்கதான் சாப்பிடுவாராம். ஆனாக்க, அவரு எப்பவோ ஏழைங்களுக்கு இலவச மா சாப்பாடு கொடுக்க ஏத்தி வச்ச அடுப்பு இன்னுமு எரியுதாமே.

அவரையும் பல பேரு மறந்துட்டானுக.

இந்த நல்ல மனுசங்க பொறந்த நாள்ளே நம்பள மாதிரி கொஞசம் காசு உள்ளவங்க ஒண்ணா சேர்ந்து, காசு திரட்டி பசிச்ச ஏழைங்களுக்கு கஞ்சி ஊத்தணுமைய்யா? என்ன

சொல்றிங்க?

## ஔவைப் பாட்டி

அவங்க பாட்டப் படிச்சா, ஔவைப் பாட்டிக்கும் பசியின் கொடுமை நல்லா தெரியும், வறுமையும் புரியும்.

கொடிது கொடிது, இளமையில் வறுமை - அப்புடின்னு பாடினாரு. அப்ப, நடுவயதிலோ, அல்லது முதுமையிலும் வறுமை, கொடுமை இல்லையான்னு கேக்குர ஜன்மங்களும் இருக்குய்யா!

அந்த பாட்டி சொன்னதுலே ரொம்ப விஷயம் இருக்கு. வயச ான ஏழைங்களுக்கு பசி, குளுரு, இல்லாமை எல்லாம் மரத்து போயிரும். எப்படா போய்ச் சேருவோமின்னு கம்முனு இருப்பாங்க. எத்தன நாளு பசியிலே தூங்கிருப்பாங்க? எத்தன வாட்டி வியாதிலே தவிச்சிருப்பாங்க. அவங்களுக்கு அதெல்லாம் பழகிப்போனது.

வயசு வந்தவங்க ஓடி ஆடி ஓழச்சு அரை வயத்து கஞ்சி குடிச்சாலும் நாளு போயிரும். நடு வயசுன்னா கொஞ்ச உடல் பலமும், உலக அறிவு கொஞ்சமானும் சேத்துக் கிட்டா அது பசியின் கொடுமைய சமாளிக்க ஓரளவு துணைக்கி வரும்.

அப்போ, பசி அறிவைத் தூண்டிவிடலாம். வாழ்க்கைங்கர ஓட்டத்துக்கு ஒரு சக்தியாக மாறலாம். பொருள் ரீதியா, சமூக ரீதியா முன்னுக்கு வரலாம்.

ஆனாக்க, சின்ன வயசு புள்ளங்க, அழுவதைத் தவிர அவங்களாலே என்னதான் செய்ய முடியும்?

சிறிசுங்களுக்கு வறுமை மட்டுமில்லே, அறியாமை இயலாமை இரண்டுமில்லே சேந்து இருக்கும். பாட்டி செ ான்னது இப்பனாச்சும் புரிஞ்சுதா?

## அத்தியாயம் 04

# சில கடந்தகால (மாஜி) ஏழைகள்



நமது சரித்திரத்த பொரட்டினீங்கன்னா, அதுல பல ஏழைங்க அவங்க தரித்தரத்த எட்டி உதைஞ்சுட்டு, நல்லா ஆயிருக்கானுகங்கர சங்கதி தெரியவரும்..

தொழிலதிபரா, நல்ல தலைவர்களாவும், மந்திரியாகக் கூடவளர்ந்து வாழ்ந்து இறந்திருக்காங்க. இந்தக் கதைங்கள்ளாம் ஏராளமா இருக்கு.

சாம்பிளுக்கு கொஞ்சம் சொல்றேன், நடராஜன் சார் இப்போ எழுதுவாரு.

பணக்காரனா பொறந்தவங்க அவங்கவுங்க வாழ்நாள்ளே மொட்டையாகி, தரித்திருத்துலே வாழ்ந்து செத்த கதைகளுக்கும் குறைவில்லை. அது ஏன் தெரியுமா?

காசு எங்கேயும் நிக்காது. அதுக்கு அப்புடி ஒரு கொணம். நின்னிச்சுனா, காசுள்ளவன் புடிச்சு வச்சிருவான். மொதல்லே பொருளாதார ஓட்டம் இருக்கே அது நின்னு போயிரும். அப்புரமா ஒலகமே நின்னு போயிரும். இது என்னாடா, கந்தசாமி மூளை கழடிருச்சான்னு

நெனச்சிராதேங்க. அதுக்குதான் படிக்கணுமிங்கரது.

கேட்டு படிச்சு பாத்து புரிஞ்சுகிடனும்.

இதெல்லாம் மனசுலே வாங்காட்டி, நீங்க ஒழச்சு நாலு காசு சேத்தாலும், உங்கள வறுமெ தொரத்திக்கிட்டு தான் இருக்கும்.

நடராஜன் சாரு அறிவெப் பத்தி சீக்கிறமா, விளக்கமா செ ால்லுங்க, அறிவ ஏழைங்க எப்புடி புடிக்கலாமுன்னு செ ால்லச் சொல்லி என்ன வெரட்டராரு.

இப்போதக்கு கொஞ்சம்நெசமான கதைங்கள படிக்கலாம். அப்புரமா அறிவுன்னா என்ன அதுல எத்தன வக இருக்கு, அதெல்லாம் எப்புடி புடிக்கலாமுன்னு பாத்துருவோம்.

பழய ஏழைங்க கதைய பாக்குரப்போ, ஒரு விசயம் சு த்தமா புரிஞ்சுக்கலாம். ஒரு சந்தர்ப்பம், டேய், இன்னிக்கு லேந்து என்னோட ஏழ்மைய ஒழிச்சுடனேன்னு ஒரு சபதம் எடுக்கும்படியா அமஞ்சுரும். அப்போ, நல்ல வழி பொல்லாதன்னு ரண்டு வழி கண்ணு முன்னாலே நிக்கும்.

கொஞ்ச நஞ்சம் அறிவு சேத்துகிட்டவன் நல்ல வழிய புடிச்சிக்கிட்டு வளந்துருவான்.

கெட்ட ரூட்டு கண்ணுலே தெரிஞ்சா, அவன் ஒருநாளக்கி இல்லேன்னா ஒரு நாளக்கி ஜெயில்லே குடுத்தனம் பண்ணிருவான். இல்லே தற்கொல பண்ணிக்குவான், மொத்தத்துலெ நாறிடுவான்.

நல்ல ரூட்ட புடிக்கிறான் பாரு, ஆரம்பத்துலே கொறச்ச அறிவோட, ஆனாக்க ஒரு நல்ல மனசோட, விடா முயற்சியால, ஏழ்மையை கிழிச்சு எறிஞ்சுட்டு நல்லா வாழ்ந்தாஙகன்னு சொல்லிரலாம்.

முன்ன்னாலே சொன்னாப்புலே, மாற்றில்லா விருப்பமுனு ஒரு கெட்டியான மனச வச்சுப்பாங்க. அதோட விடாத முயற்சி பண்ணி சரியான சந்தர்பங்க அவங்கள ஒச ரத்துக்கு கொண்டு போயிரும். அதுவரக்கும் பொருமையா ஒழைக்கணும்.

முக்கியமா, புத்தி (அறிவு) சேக்கரதுல்ல எப்பவும் கவனமா இருக்கணும். இல்லே ஓழச்சி சேத்த பணம் ஓடிப்போயிரும்.

எந்தக் காலத்திலும் ஏழைங்க வசதியா உயரரதுக்கு, மூணு மந்திரம். விடாத ஓழைப்பு, அறிவில ஒரு நாட்டம், மாற்று இல்லாத விருப்பம், இந்த மூணும் உதவிக்கு வரும். இத வச்சு ஒரு கூட்டணி அமக்கணும். எப்பவும் கலச்சுடக் கூடாது.

**குறுக்கு வழிகள் ஆபத்தானது.**

நெரய ஆளுங்க, குறுக்கு வழிகங்ளைத் தேடிபிடிச்சாங்க, குறைந்த காலத்தில் பெரிய காச பாத்தானுங்க. ஆனாக்க வாழர நாள்ளே அதிகநாளு ஜெயில்லே வாழ்ந்து செ த்தாங்க.

அறிவுலே கொறஞுசவங்க, அதாவது பல ஏழைங்களும், ஏழைமை இல்லாம பெரிசசா சொத்து சேக்கற பேராச புடிச்ச வனுங்க என்னநெனப்பாங்கன்னா இவன் பெரிய மனுச ன். இவருக்கு பெரிய செல்வாக்கு இருக்கு. அவனோட ஓட்டிகிட்டாக நாம வசதியாயிடலாமுன்னு அங்கே போயி மாட்டுவானுக.

ஒரு விசயம் சொல்லிடரேன். பெரிய மனுசங்களுக்கு, நம்மள விட கொஞ்சம் அறிவு கூடுதல் தான். அதுனால தான் அவன் பெரிய மனுசனா, பணக்காரனா, தலைவனா வாழுறாங்க. அவுங்க செய்யிர தொழிலுக்கு முக்கியமான முதலீடு என்னன்னாக்க, மக்களோட அறிவுலே கொறவு இருக்கறது தான்.

நம்மள உபயோகிச்சுக்கிடுவாங்க. நாம் னெனச்சுக் கூட பாக்க முடியாத காசெல்லாம் கெடக்கும். ஓத்துகறேன்.

சட்டம் ஒரு இருட்டு அறைன்னு அண்ணா சொன்னாருன்னு படிச்சிருக்கேன். அங்கே என்ன நடக்குதுன்னு யாருக்கும் தெளிவா தெரிஞ்சுக்கிட முடியாது.

பல நாளக்கி கண்டுக்கிடாத சட்டம் ஒரு நாளக்கி முளிச்சு க்கிடும் பாரு. அன்னிக்கி டங்குவாரு அறுந்து போயிரும்.

பெரிய ஆளு எபோதும் தப்பிச்சுக்குவான். சட்டத்த வளச்சு ஆளுங்கள மடக்கி முடிஞ்சவரக் பத்திரமா மத்தவனையும் காப்பாத்த முயற்சி பண்ணுவான், இல்லேங்கல்லே. தன்னோட தலைய பாப்பச்அத்திகரதுக்கு, ஏழைங்களே காவு கொடுத்துருவான். அவனுக்கு தலையிலே அறிவிருக்கு அதுனாலேதான் அவன் தலைவன்.

அறிவ சேத்துக்கங்க. நீங்களும் தலைவனாகலாம். ஆனாக்க தில்லுமுல்லு பண்ணி, ஏழைங்கள சொறண்டி இன்னிக்கு கோடானு கோடி ரூவா சேத்திருக்கானுக இல்ல. அந்த ரகம் வேண்டாம். யாருமே பட்டினி, வியாதின்னு சாகாம, நாட்டுக்கும் நமக்கும் நல்லது பண்ற மாதிரி தலைவனாகுங்க.

ஒரு ஏழை ஒரு மிடில் கிளாஸ் ஆளோட கூட்டு சேந்தானாம். ஏழை மிடில் கிளாசாயிட்டன். பதவி என்ன, காரு பங்களா என்ன? இந்த ர

ன்டு பேர்க் கூட்டணி மொதல்ல ஏழைங்க வயித்துலே அடிக்கிற தொழிலே ஆரம்பிச்சானுங்களாம்.

தலவருங்க பாத்தானுகளாம். இந்த கூட்டணி நல்லா இருக்குல்ல. ஏழைங்களே என்னமா சொறண்டிறானுங்க , அப்புடீன்னு மகிழ்ந்து போயி பெரிய பதவியெல்லாம் தந்தாங்களாம். மூணு பேரும் சேந்து கோடி கோடியா சம்பாரிச்சாங்களாம்.

ரொம்ப நாளக்கி தூஙிக்கிட்டுருந்த சட்டம் முழிச்சுகிட்டுருச்சி. இவங்களே பிடிச்சுது.

தலைவருங்க தப்பிச்சு வெளிய வந்துட்டாங்க. தொண்டருல்லே மிடில்கிளாசு ஜெயில்லேந்து வெளிய வர்ர வழியா தெரியல்லே. ஏழை தூக்கு போட்டுக்கிட்டு செ த்துட்டாரு.

இப்ப புரியுதா, தப்பு வழி ஏன் போகாதேங்குறேன்னு?

சில உண்மைக் கதைங்களப் படிப்போமா?

## 01 குமாருவின் கதை:

ஒரு மிகவும் பின் தங்கிய கிராமம். அதில் சுமார் ஏழு வயதுள்ள பையன். பேரு குமாரு. வீட்டுலே ஏதோ தகராறு. அப்பா அடிச்சிட்டாரு. கோபத்தில் வீட்டுலேந்து நடந்து அடுத்தாப்புல இருக்கிற சின்ன டவுனுக்கு போறான். பசி காத அடைக்குது. கடைக்காரர் டீயும் பன்னும் தந்து தன் டீக்கடையில் வேலையும் தந்தாரு.

அங்கே வேலை செய்தபோது டீ கிளாஸ் ஒன்று கை தவறி கீழே விழுந்து நொருங்கி போயிருச்சு. கோபம் வந்த அந்த முதலாளி, அவன் அப்பன் வாசிச்சது போதாதுன்னு பய்னோட முதுகுல மத்தளம் வாசிச்சாரு.

பையனுக்கு கோபம் தாங்கலே. ராவோட ராவா ரயில்லே ஏறி, பயணிகளின் இருக்கையின் அடிலே படுத்தவன் தூங்கிட்டான். தூக்கம் முழிச்சுப் பாத்தா சென்னைக்கு தான் வந்துட்டது தெரிஞ்சுது. இப்படி எத்தனயோ புள்ளங்க சென்னைக்கி வந்துடராங்க. மறுபடியும் ஒரு டீக்கடைலே வேலை.

வருடங்கள் ஓடியது.

அவனுக்கு அரசியலில் மோகம்னா தப்பு. ஒரு குறிப்பிட்ட தலைவரு மேல மீது ரொம்ப பக்தின்னு செ ால்லலாம். அவரோட பேச்சுல ஒரு மயக்கம். அவர் மந்திரியானால் நம்மளைப் போல ஏழைங்களே யாருமெ இருக்கமாட்டார்கள் என்று குமாரு நம்பினான்.

அவனுக்கு அப்போ சுமார் பத்து வயசு இருக்கும். அந்த தலைவர் பேசும் கூட்டங்களுக்கு தவறாமல் போயிருவ்வான். அவரு எப்போது மந்திரியாவார் என்று ஆவலோடு எதிர்பாத்துட்டு வந்தான்.

இப்போ குமாருக்கு வயது இருபத்தி ஐந்து. சென்னையில் ஒரு சிறு டீஸ்டாலுக்கு முதலாளி.

திடீரென்று ஒரு நாள் தமிழகமே பரபரப்பாகுது. தமிழகத்த்துலே சட்ட சபைக்குத் தேர்தல். அது மட்டுமில்லை. கட்சியின் ஒரு முன்னணிப் பேச்ச

ளராயிருந்த, குமாருவின் மதிப்புக்குறியவர்தான் அந்த தொகுதிலே போட்டியாளரு.

அவர் கூட்டங்களில் ஏழைகளின் வாழ்வில் உள்ள துயரங் களை அடுக்குவாரு. தஙகளோட தலைவர், ஏழைகளின் துயரங்களை துடைக்க பாடு பட்டுவருவதை விலாவாரி யாக, அதுவும் அடுக்கு மொழிகளில் விளக்குவார்.

எதிர் கட்சிககாரங்களோட சூழ்ச்சிகள பட்டியல் போடு வாரு. குமாருவுக்கு கட்சி, தலைமை என்று எதுவுமே பு ரியாது. எப்படியாவது இந்த பேச்சாளர் மட்டும் முதன் மந்திரியானால், தன்னைப் போன்ற ஏழைகள் வேதனைப் பட மாட்டார்கள் என்று நம்பினான். பேச்சாளர் இப்போது தொகுதி வேட்பாளர். இவர், குமாருவின் கனவின் வரத் தொடங்கினார்.

தமிழ்நாடே சுறு சுறுப்பாகுது. குமாரு தன் நண்பனை தன் டீக் கடையைப் பொறுப்பாக்கிட்டு தலைவருக்கு உதவியாக களத்தில் இறங்கினான். ராத்திரி பகல் என்று பார்க்காமல் - முடிந்த, தெரிந்த வேலைகளை எல்லாம் செஞ்சான். மற்றவர்களைப் போல வேட்பாளரிடம் காசு பணம் கேட்கவில்லை. தன் சொந்தக் காசில் பல சிறிய செலவுகளை, தலைவருக்காக, மகிழ்ச்சியுடன் செஞ்சுட்டு வரான்.

போஸ்டர் ஒட்டுவது, ஊர்வலத்திற்காக (நண்பர்களை) ஆள் சேர்ப்பது, கோஷமிடுவது. தலைவரும், குமாருவை கவனிக்காமல் இல்லை. தலைவரின் பிரதான எடுபிடி ஒருவ ரும், குமாருவைப் போன்ற விசுவாசிகள் தலைவர்களுக்கு அவசியம் என்று உணர்ந்திருந்தான். குமாரு செய்துவரும் சேவைகளை அவ்வப்போது பாராட்டியும் வந்தான்.

தலைவர் வெற்றிகரமாக எம்.எல்.ஏ பதவியைப் பிடித்தார். அவர் ஒரு நாள், தன்னை எப்போதும் சூழ்ந்திருக்கும் எடுபிடிகள் கூட்டத்துடன் குமாருவின் டீக்கடைக்கு விஜயம் செஞ்சாரு.

டீக் கடை முன்னாடி, போகிறவங்க வர்ரவங்க எல்லோரும்

வேடிக்கை பார்க்கக் கூடினாங்க மாண்புமிகு எம் எல் ஏ, தன்னைக் குமாருவின், உயிர் நண்பன் என்று அங்கே அறிவிச்சாரு.

கட்சிலே குமாருவுக்கு ஒரு பதவிக்கு சிபாரிசு செய்யப் போறதா அறிவிச்சாரு. அப்போது கூடி நின்றவர்கள் கைதட்டி பாராட்டினாங்க. (ஏழைகள் எதற்குத்தான் கைதட்டுவது என்று சிந்திகிறதில்லையே)

அன்னிலேந்து, போலீஸ்காரங்க, அவ்வப்போது நடத்தும் கட்டாய (மாமூலுக்கு) வசூலுக்காக குமாருவின் டீக்கடைக்கு வருவது நின்றது.

நண்பர்களுக்கு உதவியாக போலீஸ் ஸ்டேசன் போனால், ஏரியா எம் எல் ஏவுக்கு வேண்டியவர் என்று தனி மரியாதை கிடைச்சுது.

குமாருவுக்கு கல்யாணம் நடந்தது. எம் எல் ஏ வந்திருந்து கௌரவித்தார்.

வருடங்கள் வேகமாக ஓடியது. எம் எல் ஏ அடுத்த தேர்தலில் வெற்றி பெறவில்லை. ஆனாலும் குமாரு இல்லாமல் எம் எல் ஏ இல்லை என்றாகிவிட்டது.

அதுக்குப் பிறகு அடுத்த தேர்தல். அதே ஈடுபாடு. இப்போது குமாருவின் தலைவர் வெற்றி பெற்று ஒரு மந்திரியானார். நன்றி மறவாத மந்திரி குமாருவுக்கு, தமது அதிகாரத்தில் என்னென்ன சலுகைகள் உண்டோ, எல்லாமே தந்து ஒ ரேடியாக உசத்திவிட்டாரு.

குமாருக்கு இப்போது உள்ள விலைவாசியில் ஐந்து ஆறு கோடி ரூபாய் மதிப்புள்ள சொத்து தேறும். எங்கோ எப்போதோ புயலில் சிக்கிய மக்களுக்கு அரசு உதவி என்ற வகையில் ஒரு இலவச வீட்டு மனை. குடிசைமாற்று வாரியம் வழங்கும் ஒரு இலவச பிளாட். இன்னும் ஏதோதோ. அதோடு குமாருடைய டீஸ்டால் இன்று ஒரு பெரிய ஓட்டலாக வளர்ந்துள்ளது. எல்லாமே தலைவருடைய கருணை.

குமாருக்கு இப்போது கட்சியின் பதவியில் பல உயர்வுகளை

தந்திருக்கிறார்கள். என்றாலும் குமாருவுக்கு தலைவர் மீது இருந்த அபிமானம் சிறிதும் குறையவில்லை.

குமாருவுடைய வாலிப வயது நன்பர்கள் கேலி செய்வதுண்டு. 'நாட்டில் ஏழைகளின் கண்ணீர் சிந்து வது நிற்கவில்லை ஆனால் அதைக் காட்டியே பத வியைப் பிடித்த தலைவரும் தொண்டர்களும் விடாது வளர்கிறார்கள்!.

குமாருக்கு தலைவர் மீது அசைக்க முடியாத ஒரு நம்பிக்கை. எதிர்கட்திகள் இவருடைய திட்டங்களை எதிர்த்து சதி செய்கிறானுங்க. ஆனாலும் தலைவர் விரைவில் வெற்றி பெறுவார். அதன் பின்னர், ஏழைகள் வேதனைப் படமாட்டார்கள்.

நாட்டில் பல லட்சம் குமாருகள் அரசியல் தொண்டராக வளர்ந்து, தலைவர்களையும் கட்சிகளையும் வாழ வைக்கிறார்கள். அதனால சில தொண்டர்களும் தானும் நல்லா வாழ்கிறார்கள்.

ஏழை மக்கள் மிகவும் நல்லவர்கள். கடவுளை நம்புகிறார் களோ இல்லையோ, தலைவர்களை நம்புவார்கள். போ தாத குறைக்கு தங்களின் ஏழ்மைக்கு கடவுளும், கடவுள் தங்கள் தலையில் எழுதியதும் சரியில்லை என்பதையும் தீ விரமாக நம்புவார்கள்..

எதிர்க்கட்சிகள் சதி செய்யும் போது, பாவம் தலைவர்கள் என்ன செய்யமுடியும் என்று பல ஏழைகள், (குமாருவின் அப்பா அம்மா இருவரையும் தவிர), நினைக்க ஆரம்பித்து விட்டார்கள்.

குமாருவோட வளர்ச்சி. இதப்பத்தி அப்புரமா ஆராஞ்சிடுவோம். நீங்களும் சிந்திங்க. அப்புரமா சரி பாத்த்துக்கிடலாம்.

## 2. சென்னையிலிருந்து மும்பாய்க்கு

சினிமா எடுத்து புகழும் பணமும் அடைய விரும்பி, பலர்,

அப்பன், பாட்டன் சொத்து எல்லாவற்றையும் வித்துட்டு கையிலே காசோடு சென்னைக்கி வருவாங்க. சேர்ந்த சில மாதங்கள்ளேயே தரித்திரராக மாறிய சரித்திரங்கள் எத்தனை எத்தனையோ.

அதே சமயம், காலி பாக்கெட்டுடன், வித்தவுட் டிக்கெட்டில் மும்பாயை வந்து அடைந்து மும்பாயிலே வெற்றிக் கொடி நாட்டிய பல தமிழர்களின் சரித்திரங்களும் உண்டு.

இதில் ஒரு சாதாரண கூலித் தொழிலாளி எப்படி ஒரு பயங்கர சக்தியாக, தலைவனாக உருவெடுத்து மும்பாயை குலுக்கினது, காலத்துலெ கரைஞ்சு போன ஒரு சரித்திரம்.

அன்று மும்பாயில் அரசியல்வாதிகளும், அதிகாரிகளும் பயமும் மரியாதையும் காட்டிய இந்த தமிழனின் வித்தியாசமான சரித்திரம் சினிமாவாக வந்துச்சு, சினிமா பாத்த சிலருக்கு நினைவுலே இன்னும் இருக்கலாம்.

இவரு கூட திட்டம் போட்டு தலைவராகவோ, செ ல்வந்தராகவோ மாறல்லே.

சென்னைலெயே இருந்திருந்தார்னாக்க மற்ற ஏழைங்களப் போல ஒரு சாதாரண கூலியாகவோ அல்லது தொழிலாளியாகவே வாழ்ந்து மடிந்திருப்பார்.

இவர் இருந்த சூழ்நிலை மும்பையில் வரலாற்றில் இவர் முக்கிய பங்கு வகிக்க வச்சிது. காரணம்னு பாத்திங்கன்னா இரக்க குணம், உசிருக்கு பயப்படாத தெயிரியம். தியாகம் எல்லாமா இவரே ஏழைங்க மத்திலே இவரே ஒரு தலைவராக்கிடுச்சு? அங்கே வாழ்ந்து வந்த தமிழ் மக்கள் மத்திலே அராஜகம் பண்ணுற ஆளுங்கள தட்டிக் கேட்டாரு. இவர தட்டிப்பாத்தாங்க. இவுரு திருப்பி பலமாவே தட்டிப்புட்டாரு.

பலவருசங்க, பெரிய போலீசு அதிகாரிங்க கூட ச ட்டத்துனாலே தரமுடியாத்த நீதிய இவுரு கையிலே எதிர்பாத்து இவரு முன்னாடி கைய கட்டிக்கிட்டு நின்னாங்கன்னா பாத்துக்கங்க. இவரும் அப்படி நீதி வழங்கினாருன்னு சினிமா சொல்லுது. கடேசில எப்புடி

கத்தியும் ரத்தமுமா வாழ்ந்தாரோ, அப்படியே ஒரு நாளக்கி அவர சுட்டு சாவடிச் சுட்டானுகன்னு, கதை முடியுது.

இந்த உண்மைக் கதையுலே நீங்க கத்துகிட்டது என்ன?

கத்துகிட்டீங்கன்னா? ஆமான்னாக்க, உங்களுக்கும் அறிவு வளருதுன்னு புரிஞ்சுக்கலாம். என்ன என்ன கத்துக்கரத்துக்கு இருக்கு. எதையானும் விட்டுட்டீங்களான்னு, கடேசிலே பாக்கலாம்.

## 03. ஒரு பெரிய பதவிக்கு போட்டி.

ரொம்பபேரு, அவங்க வளர்ச்சிக்கு சந்தர்ப்பமும் சூழ்னெல கூட ஒரு மிக முக்கிய காரணமுன்னு ஒத்துக்கிட மாட்டாங்க. தன்னோட திறைமை தான் காரணமுன்னு செ ால்லிப்பாங்க.

எந்த நாட்டிலேயும் தலமை பதவிக்கு ஏகப்பட்ட போட்டி இருக்குமுல்லே.

தகுதி இல்லாத பலபேரு பண மூட்டயெ வச்சுகிட்டு போராடுவான். அவன் பின்னாடி கொஞ்சம் பேரு திரிவானுங்க. ஜாதிய, மதத்தை, மக்களோட பசி பட்டினிய, மக்களோட பின்தங்கிய நெலம இத எல்லாம் காட்டி, இந்த மக்களுக்கு நான்தான் ஒரே பிரதினிதி அதுனாலே எனக்குதான் தலமை பதவி வேணும்பான்.

இந்த ஜாதிலேந்து வரேன். அதனலே, நான் நாட்டுக்கு பிரதான மந்திரியா வரத்துக்கு தகுதி உள்ளவன்னுட்டு குதிப்பான். அவனுக்கு பின்னாலேயும் ஜால்ரா போடர ஆளுங்க இருக்கும். இவனெல்லாம் ஒரு மாதிரியா கூட்டு சேருவானுக. எவனாச்சும் ஒத்தன் வந்தாகணுமில்லே.

கை தூக்க விலை எத்தனை, என்ன பதவி என்று எல்லோரும் பேரம் பேசுவாங்க. அவனுக்கெல்லாம் பதவி தந்திடுவானுங்க. சிலருக்கு, நாட்ட நல்லா கொண்டு வரத்துக்கு அறிவிருக்கும். பலருக்கு இல்லாமலும் இருக்கும். ஆனாக்க கிடச்ச பதவிய புடிச்சு வச்சுக்கரதுலே கெட்டிக்காரங்க.

அப்புரமா, கூட்டு சேந்தவங்க, அவனவன் சக்திக்கு தகுந்த மாதிரி கொள்ளை அடிச்சிக்குவான். கேட்டாக்க, கூட்டணியா ஆண்டா அப்படித்தான்னு சொல்லிவானுக. ஏதோ தனியா ஆட்சி பண்ணப்போ கொள்ளையடிக்காத மாதிரி.

**ஒரு பிரதமர் பதவி**

இத வச்சு ஒரு முன்னாள் சம்பவம் ஒண்ணு சொல்லரேன்.. தென்னாட்டுலேந்து எம் பி யாகி பிரதான மந்திரி பதவிக்கு வரது ரொம்ப சிரமம். உள்ளூர்லே முக்கிய மந்திரி ஆவுரத்துக்கே முக்கி முனகி முப்பது அம்பது கட்சிங்கள கூட்டு சேத்துக்கிட்டா மாத்திரம் போதாது. இங்கே அரசியல்நடத்துரவனுங்க, ஏழைங்களுக்கு இலவசமா ஏதானும் தந்தாத்தான் ஓட்டு கிடைக்குமுன்னு ஒரு நெலமய உண்டாக்கிட்டாங்க,

இப்படி இருக்கச்சே, இவனுக என்னிக்கி பிரதமராக கனவு காண்பது? அப்புரம் பிரதமராவுரது?

அப்படிப்பட்ட நேரத்துலே தென்னாட்டுலேந்து ஒருத்தரு பிரதரானாரு. அவருக்கு, அவுங்க பார்ட்டீலே ஆள்பலம் இல்லே., பண பலமும் சுத்தமா இல்லே.

கட்சிலே தலவருங்களுக்கு பல வருசம் விசுவாசமா இருந்தாருன்னு ஏதோ கொஞ்ச நாளக்கி மந்திரி பதவி கெடச்சுது. அவ்வளவுதான். மத்தபடி அவுரு பிரதான மந்திரியா ஆவருத்துக்கு சான்சே இல்லைய்யா.

அப்ப பாத்து, பார்ட்டீலெ பல வருஷம் பழமும் தின்னு கொட்டை போட்டவனுக. ஆள் பலம் பண பலம், எல்லாத்தையும் கையிலே பிடிச்சுகிட்டு போட்டி போடுரானுகளாம். ஆனாக்க கடேசிலெ பிரதான மந்திரியானது. யாரு தெரியுமா? ஒண்ணுமே இல்லாதவரு.

பணம் ஆளு வச்சிட்டு இருந்தாங்களே, அவங்களுக்குள்ளெ ஒரு தகராரு, எனக்கு பிரதமர் பதவி கிடைக்காட்ட்டா, மத்த ரேண்டு பேர்லே எவன் பிரதமரா வந்தாலும் கவுத்துருவேன்னு. போகட்டும், இந்தக் கௌவன கொஞ்ச

நாளக்கி பிரதமராக்கி வப்போம். நமக்குள்ளே ஒரு ஒத்தும வந்ததுக்கப்புரம், அவன கீழ தள்ளிட்டு மூணு பெருல ஒத்தன் ஒக்காந்திருவோமுன்னு முடிவு பண்ணாங்களாம். இந்த கிளவன தள்ளிடறது சொம்ப சுலபம். வேற எவனையாவது ஒக்காத்திவச்சாக்க ஆபத்துன்னு முடிவு பண்ணினாங்களாம்.

கெளவரு ரொம்ப புத்திசாலி. சாது மாதிரி இருந்துகிட்டு பதவிய ஒத்துக்கிட்டாரு. பிடிச்சு ஏறி ஒக்காந்தாரு.

அவ்வளவுதான். இந்த மூணு  பேத்துமேலேயும் இருந்த பழைய  கேசுங்களை எல்லாம் தூசி தட்டி எடுத்து (அது தான் வண்டி வண்டியா இருக்குமுல்லே) கேசு போட வச்ச ரராம்.

மூணுபேத்து மேலேயும் அடுத்த அஞ்சு வருசம் கேசுங்க ஓடிச்சு. அதுவரைக்கும் பெரியவரு (கவர்மெண்டுக்கு மெஜாரிட்டி கூட இல்லையாம்) நிம்மதியா, ஆட்சி நடத்தினாருங்கரது உலகம் அறிஞ்ச உண்மை.

இது போல  சரித்திரம் ஒன்று ரண்டு இல்ல. தமிழ் நாட்டுலே மட்டுமே  ஒரு லட்சம் மக்களாவது இருப்பார்கள். அரசியல் வாழ்க்கையில் எடுபிடியாக துவங்கி, ஒரு சின்ன தலைவரா, பெரிய தலைவரா பதவியைப் பிடிச்ச கதைங்கள்ளாம் சினிவாக் கூட எடுக்கராங்க இல்லியா?

அதுலே ஒண்ணு, ஒரு பிச்சைக்காரன் ஒரு மிகப் பெரிய சாராய வியாபாரியாக வளந்து அரசாங்கத்தையும் அதிகாரிகளையும் ஆட்டிவச்ச சினிமா ஒன்று பார்த்த நினைவு.

வளரும் ஆர்வம் திறமை இருந்தாலும், ஆர்வம் நிறைவேற சமய-சந்தர்ப்பம் ஒரு முக்கிய காரணம்.

ஒருவர் பிரதமராவதோ நாட்டின் குடியரசுத் தலைவராகவோ தெரிந்தெடுக்கப்பட ஏதாவது ஒரு உறுதியான திட்டம் உண்டா?

இதற்கெல்லாம் கடும் போட்டி உண்டு. ஒருவர் பலவீனமா

னவர், இவருக்கு  பக்க பலமாக பத்து பாராளுமன்ற அங் கத்தினர் கூட தேராது என்று

ஒரு தடவ, ஒரு மிகவும் நல்ல மனுசன், பணக்கார வீட்டுலே பொறக்காத ஆளு, விஞ்ஞானி குடியரசு தலைவரா வந்தது ஒரு மிகப் பெரிய சம்பவம். அடுத்தாப்பல இன்னும் ஒரு விஞ்ஞானி, இவர மக்கள் உண்மையா விரும்பினமாதிரி இன்னும் ஒருத்தரு நமது நாட்டின் குடியரசுத் தலைவராக பதவி வகிக்க, வாய்ப்பு எத்தன?

இதெல்லாம் மிகுந்த சர்ச்சைக்கும் பிரச்சினைகளை கிளப்பும் விஷயம். )

**இதுலே படிப்பினை என்னான்னாக்க:**

இப்ப சொல்லுங்க நம்மளோட கௌவரு அடஞ்ச வெற்றிக்கி அவரு மட்டுமா காரணம்? அந்த மூணு  பேரு ஒத்துமையா பதவிய பங்கு போட்டுக்கிடிருந்தாங்களா கௌவரு பிரதமரா ஆயிருப்பாரா? நல்லா யோசிங்க.

இப்புடி பணக்காரராவுரது, பதவிய பிடிக்கிறது. காதல்லே ஜெயிக்கரது தீவிர முயற்சிம் தீராத விருப்பம்  எல்லாமே இருந்தாக்கூட, சூழ்னெலையும் சாதமா இருக்கணும். தப்பு தண்டா பண்ணாம, பொருமையா இருந்தா வெற்றி எப்பவனும் வரும். ஆனாக வெறிபிடிச்சு தப்பு ரூட்டுலே எறக்கினா கத கந்தலாயிரும்.

எல்லோருமே ஜெயிச்சுப்புட்டா என் அறிவாலதான் இல்லே சாமர்த்தியத்துனாலே ஜெயிச்சென்றுவான். அப்படி தப்பான எண்ணம் வச்சிருக்கானுல்லே, அவனுகளுக்கு அடுத்தாப்புலே விழுவுர அடிங்க ஆசுக்கும் மறக்கமாட்டன்.  அவர்களுக்கு அந்த தப்பான மனத்திடம் இருந்தாலும், அவரை சுற்றியுள்ளவர்கள் அவங்களே கடம் வாசிக்க தாராயிடுவானுக. இத்தோட  இப்படிப்பட்ட உண்மைக் கதைகளை நிறுத்திக் கொள்ளாட்டா என் முதுகிலேயும் கடம் வாசிச்சுடுவானுக.

## 4. மணியடிக்கும் தொழிலாளி

இந்தக் கதை சிறுவயசிலே பாடமாப்  படிச்சது.

ஒரு கிறித்தவ தேவாலயம் ஒரு வித்தியாசமான முடிவு எடுத்தது. அதாவது, தேவாலயத்தில் இறைவனின் பணியில் உள்ளவங்க எல்லோரும் கொறைஞ்சது எழுதப் படிக்கவாவது தெரிஞ்சிருக்கணுமின்னு.

அய்யொ பாவம். கோவில்லே மணி அடிக்கும் தொழிலாளி ஒருத்த்ரு எத்தனைதட முயற்சி பண்ணினாலும் எழுதப்படிக்க வரல்லே.

கோவில் நிர்வாகம் இந்தத் தொழிலாளிக்கி கொஞ்சம் காசு கொடுத்துட்டு வீட்டுக்கு போகச் சொல்லிருச்சு. நீக்கும் முன்னால் ஒரு சிறிய தொகையை அளித்தது. ஆமா படிப்புமில்லாம, மணியடிக்கரது மட்டும் தெரியும்னா, கலெடர் வேலையா கெடைக்கும்?

கெடச்ச காச வச்சு ஒரு சின்ன பெட்டிக்கை ஆரம்பிச்சரு. (ஒரு கதவு மூடினால் வேறு ஒரு கதவு திறக்கும் என்பது ஒரு நம்பிக்கை. நடாஜன் சார் நான் நம்பரது கொஞ்சம் வித்தியாசமானது. பல கதவுங்க என்னிக்கும் எப்போதும் திரந்தே இருக்கு. ஆனாக்க அதப் பாக்க நாம தொரக்க வேண்டியது நம்மோட மனசில இருக்ஓகிர கண்களை மட்டும்தான்)!

அப்படியெ ஒரு 25 வருசம் ஓடிருச்சு. இப்போ அவரு பல கடைகளுக்கு சொந்தக்காரர். சொத்து சேந்திடிச்சு.

சுமார் நூறு வருசங்களுக்கு முன்னாலே, வங்கிகள்ளாம் கஸ்டமரத் தேடிப் போவாங்க.

பல வங்கிகள் நம் நாயகனை அவங்ல வங்கிலே வாடிக்கை யாளராக்க போட்டி போட்டாங்க கடேசிலே. ஒரு வங்கிய தேர்தெடுத்தாரு. வங்கிக் கணக்கை துவக்கும் நாள் வந்திச்சு.

பக்கம் பக்கமா தாகளெல்லாம் கொடுத்து கையெழுத்து போடச் சொன்னாங்க. படிச்சிட்டு மெதுவா போடுங்க அவசரமில்லேன்னாரு மேனேஜர் ஐய்யா. நம்ம ஆளுக்கு படிக்கவும் எழுதவும் தெரியாது, இல்லலையா? அதுனாலே, பாக்கமலே கையெழுத்து போட்டாரு.

அதிகாரிக்கு ஆச்சரியம். படிப்பறிவில்லாமலா இத்தனை பெரிய வியாபாரியாக இருக்கிறீங்கன்னு கேட்டாரு.

அங்கே நிக்கல்லே. உங்களுக்கு மட்டும் கல்வி கெடச்சிருன்தாக்க எங்கேயோ போயி .... அதிகாரி முடிக்கவில்லை, வியாபாரி, முன்னாள் மணிஅடிக்கும் தொழிலாளி சொன்னாரு:

தேவாலயத்துலே மணி அடிச்சிண்டுருபேன். அப்புடின்னாரு.

இருவு, வேல நழுவி போறப்போ அழுதுக்கிட்டு நிக்கல்லே. கெடச்சதே வெச்சு முடிஞ்சத செஞ்சாரு. பெரிய பணக்காரராவுறது இவரோட கனவு இல்லே. வயித்து கஞ்சி வேணும். மணியடிச்சு கெடச்ச கொஞ்ச காசு போரும்முன்னுதான் இருந்தாரு. விதியோ என்னமோ, கெடச்ச கஞ்சியும் போயிருச்சு. அவுரோட மனக்கண்ணு முன்னாலே ஒரு தொரந்த கதவ பாத்தாரு. நொழஞ்சு ட்டரு. நல்லாயிட்டாரு.

இத்லே படிக்குற பாடம் என்ன ? மனுசுலே வாங்கிப் பத்திரமா வச்சிட்டு சிந்திங்க உங்க வாழ்க்கேல தொறந்த கதவுங்க, ஒண்ணு இல்லே,நெறய தெரியும்.

சரி, அடுத்த பாடத்துக்குப் போவோமா?

## (5) மிளகாய் வியாபாரிகள்

கடைசியாக, சமீபகாலத்துலெ நான் கேட்ட ஒரு உண்மைச் சம்பவம்.

அது ஆந்திரபிரதேசத்துலே ஒரு சின்ன ஊரு. அங்கே ஒரு ஏழ்மையிலே தத்தளிச்சுக்கிடிருந்த ஒரு விவசாயக் குடும்பம்.

அவுங்க்க மிளகா பயிர் போடுவாங்க. காய வச்ச மொளகாய ஒரு மூட்டையா கட்டிக்கிட்டு அதை விற்கருத்துக்கு ரண்டு மகன்னுங்க ஹைதராபாதுக்கு போறாங்க.

களவானிப் பசங்க எங்கதான் இல்லே? பஸ்ஸிலிருந்து இறங்கின கொஞ்சநேரத்துலே மிளகாய் மூட்டை களவு

போயிருச்சு.

காசில்லாம வீட்டுக்குப் போனா என்ன ஆகுமோன்னு பயமோ என்னமோ தெரியல்லே. வந்த ஊர்லேயே ரண்டு பேரும் தங்கிட்டாங்க.

ஒண்ணு ரண்டு வருசம் ஊருக்கே போகல்லே. மூட்ட தூக்கறது அது இதுன்னு கெடைச்ச வேலை எல்லாம் செஞ்சாங்க. கல்வி அறிவு சுத்தமாக கிடையாது. ஆனாக்க பணிவு ரொம்ப அதிகமாம்.

அதுக்குள்ளார தங்க ஒரு குடிசையும் ஒரு சில பசு மாடுகளை வாங்கிட்டானுக. பால் வியாபாரமும் தொடங்கினாங்க. கிராமத்திலிருந்த அப்பா அம்மா தம்பி எல்லோரையும் கூட்டி வந்துட்டாஙக. அப்புரம் என்ன. பால் கொடுக்டுகர இடத்துலே நல்ல பேரு சம்பாரிச்சாங்க. கிடச்ச காச பள்ளிக்கூடத்துலே முதல் போட்டாங்க.

ஒரு பள்ளியைத் தொடங்கருத்துக்கு படிண்ச்சவரோடு கூட்டு சேந்தாங்க வெற்றி கெடச்சுத்து. அதைத் தொடந்து, புதியதாக அவரு தொடங்கர பள்ளிக்கூட்ங்கள்ளே கூட்டு சேர பலர் தயாராயிட்டாங்க.. ஒருநாப்பது வருசத்திலே நிலம் வாங்கி விக்கரது, சீட்டு நடத்துரதுன்னு விடாம ஒழைச்சாங்க. இன்னித் தேதிக்கி கணக்கில்லாத பள்ளிக்கூடங்களுக்கும் பொரியியல் கல்லூரிங்களுக்கும் இவங்கள அதிபதியாக்கியது.

காசு வந்தாச்சினா அரசியல்லே புகுந்தருணுமே. இல்லியா? இப்போ ஒரு அரசியல் பிரமுகரோட பொண்ணு புள்ளைய கல்யாணம் பண்ணிகுதுத்து குடும்ப உறவு பண்ணிக்கிட்டாங்களாம்.

பள்ளிகூடத்தில் மழைக்குக் கூட ஒதுங்காத அண்ணன் தம்பிக்கு இன்று பல பள்ளிக்கூடங்கள், கலைக் கல்லூரிகள் பொரியியல் கல்லூரிகள் எல்லாத்துக்கும் சொந்தம்.

## கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க:

இந்த அண்ணன் தம்பிகளுக்கு மிளகாமுட்டை மட்டும்

களவு போகாமல் இருந்தால், வித்த காசோட சொந்த ஊருக்குப் போய் இன்னமும் மிளகாய் பயிரிட்டு வித்துக்கிடு இருப்பாங்க, இல்லீங்களா ????

இந்த கதையில் நாம் காண்பது, வெற்றியை அடைய மேலும் ஒரு அதி விரைவுப் பாதையை. அது என்ன? நாம அழைக்காமலே வர விருந்தாளிங்க யாரு? கஷ்டம் நஷ்டம் எல்லாந்தான். அதுலே ஆடிப்போயிராம, அத ஒரு சாலஞ்சா எடுத்துக்கிட்டு தொரந்த கதவுகள மனசுனால தேடனும்.

புரிய்யுதா?

இதிலெ கெடச்ச அறிவு என்ன? மனசுலே வாங்கி பத்திரமா வச்சு, சிந்தியுங்க, என் அருமை ஏழைநண்பர்களே.

# அத்தியாயம் 05

# நாமெல்லாம் இரண்டு வழிகளில் ஏழையாகிறோம்?

இந்தக் கேள்விக்கு பதில் கிடைச்சா ஏழையாக மாறாமல் நம்மை நாமே காப்பாத்திக் கொள்ளலாம்.

முக்கியமானது சிலவற்றை மாத்திரம் சிலவற்றைப் பார்க்கலாம்,

உண்மையிலே ஏழையாகறதுக்கு யாரோட உதவியும் அவசியம் இல்லை. அறிவு குறைவா இருந்தாக்க ஏழ்மை நம்மைத் தேடி ஓடிவந்துவிடும்.

அது எப்படி? கொஞ்சம் அறிவு அதிகமா உள்ளவங்க பல பேரு தங்களுடைய ஏழ்மையை தொலைப்பதற்கு அறிவு குறைந்த ஆள் யாரும் கிடைக்கிறாங்களா என்று தேடி சுத்திக்கிட்டு இருக்காங்க. அப்படி காதிலே பூ வைத்த ஆள் கிடைத்தால், அவங்க கிட்டே மாட்டினா, அவங்க கையிலே தன்னோட வறுமையை வைத்து விட்டு தான் வளம் ஆயிடுவாங்க.

உதவி இல்லாமல், தானே ஏழையாக மாற இரண்டு வழிகள் இருக்கு. ஒண்ணு தெரிஞ்சு, விரும்பி ஏழையாகுரது.

## முதல் வழி

கேரளாவிலே, ரொம்ப வருசம் முந்தி, ஒரு ஏழைகளின் தலவர் இருந்தார். பிறவியிலே பெரிய பணக்காரராம். அவருடைய சொத்து எல்லாத்தையும் ஏழைகளுக்காக கொடுத்து விட்டதா சொல்றாங்க.

அடுத்து, நமக்கு வரலாரு சொன்ன ஒரு செய்தி. வினோபா பாவேன்னு ஒருத்தரு, அவரோட நிலத்தை விவச ாயிங்களுக்கு கொடுத்தது மட்டுமில்லே, பூதான இயக்கம் அப்படின்னு ஒண்ணு ஆரம்பிச்சாராம். விவசாயிகளுக்கு, பணக்காரங்க அவங்க நிலத்தை இனாமா தரணுமுன்னு

ஒரு ஏற்பாடு பண்ணினாராம்.

காந்தியோட சீடராம். இவரை சீடரா ஏத்துக்கிட்ட பிறகு காந்தியோட ஆசிரமத்துலே வினோபா பாவே சேந்தாராம். ஆசிரமத்துலே சேந்தவங்க ஏதானும் ஒரு வேல கொடுப்பாங்களாம்.

ஆசிரமங்கறது நட்ச்த்திர ஓட்டல் இல்லை. எல்லொரும் ஒரு வேல பண்ணனும். அவரு வேல கேட்டதுக்கு, காந்தி தந்த முதல் வேலை என்ன தெரியுமா? ஆசிரமத்தில் உள்ள கக்கூசக் கழுவுர வேலை. அதை முதல் வேலையா கொடுத்தாராம். எதுக்கு தெரியுமா? தன்னுடைய எல்லா சொத்துகளை ஏழைங்களுக்கு கொடுத்ததால தலைக் கனம் வரக்கூடாது என்கிற ஒரு காரண்மாம். முதல்லே பணிவு வரணும். அதற்க்கு அப்புரம் என்ன வேல கொடுத்தாங்களோ தெரியல்லே.

இது மட்டும் இல்லாமல் நெரய உண்மைக் கதைகள் இருக்கு. அதெல்லாம் நிரைய படிச்சு மனசுலே ஏத்திக்கிடணும்.

சில பணக்காரர்கள், விரும்பி ஏழையான உண்மைக் கதைகலைப் பற்றி தனியா ஒரு புத்தகம் எழுதி விடலாம்.

எந்த காரணத்தால், இவங்கள்ளாம் தன் கிட்டே உள்ள எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு, தான் ஏழையானாங்க?

அறிவு, ஓர அளவுக்கு மேல், அதிகமானா, பொருள் மேல உள்ள ஆசை, சாவு மேல பயம். கோபம், ஆமைகள் - எல்லாமே ஓடிவிடும். அன்பு கருணை வளர மெதுவா, புத்தர், வள்ளலாரு, ஜீசஸ் கிருஸ்து, தீர்க்கதரசி முஹம்மது அளவுக்கு மெதுவா வளர ஆரம்பிச்சுடுவோம்.

பின்னால அறிவப் பத்தி பாப்போமில்லே, அப்போ அலசிடுவோம். இப்போதைக்கு இந்த வகை ஏழைங்களே விட்டு விடுவோம்.

## இரண்டாம் வழி

அறியாமல் தெரியாமல், தான் விரும்பாமல் பல பேரு

தினம் தினம் ஏழையாகர கதைகளை பத்தி மாத்திரம் பாப்போம்.

## கதை - கற்றும் அறிவில்லாத மக்கள் - உண்மை நிகழ்ச்சி.

ஒரு பெரிய நகரம். மத்ய தர மக்கள் வசிக்கும் ஒரு காலனி. வியாபாரம், அரசாங்க உத்யோகம் என்று கல்லூரியில் பட்டங்கள் பல பெற்ற பலர் அங்கே வசிக்கிறார்கள். அதில் ஒரு வாடகை வீட்டில், வெளியூரிலிருந்து வந்த சிலர், விளம்பரம் ஏதும் இல்லாத ஒரு புதிய வியாபாரம் தொடங்குகிறார்கள்

## கதையின் முதல் பாகம்:

வியாபாரிகள் ஒரு திட்டம் வைத்திருக்கிறார்கள். அதாவது நமது வீட்டிற்கு ஒரு குளிர்சாதன பெட்டி ஒன்று (சுமார் ரூபாய்6000 விலையுள்ளதாகக் கொள்வோம்) தேவைப்பட்டால், ரூபாய் 2000 மாத்திரம் தந்து திட்டத்தில் சேரவேண்டும். சரியாக 3 மாதம் கழித்து நமக்கு நாம் விரும்பிய குளிர்சாதன பெட்டி ஒன்றைத் தருவார்கள்.

முதலில் இந்த திட்டத்தில் அடுத்துள்ள மக்களுக்கு நம்பிக்கை வரவில்லை. ஆகவே, பரிசோதிப்பதற்காக, முதல் மூன்று மாதம் வரை, காலனிவாசிகள் சிறிய தொகை ஒன்றைத் தந்து திட்டத்தில் சேர்ந்தார்கள். குறிபிட்ட மூன்றாம் மாதம் முடிந்ததும், திட்டத்தில் சேர்ந்த அனைவருக்கும் அவரவர் விரும்பிய பொருள் கிடைக்க, அடுத்த நாளிலிருந்து கூட்டம் அலை மோதியது.

ரூபாய் 2000 மூன்றே மாதத்தில் ரூபாய் 6000 ஆக வளரும் அதிசயம் எப்படி நிகழும்? என்று யாருமே, அறிந்திருக்கவில்லை. இதைப் பேராசையாக நினைப்போரும் உண்டு. தவறில்லை.

பொறாமைப் படுபவர்கள், கோபம் கொள்வோர், பேராசைக்காரர்களும், அனைவரும் அறிவில்லாதவர்களாகவே இருக்க வாய்ப்புண்டு. தாற்காலிகமாக சிந்தனை இழந்தவர்களாகவும் அல்லது சிறிதும் சிந்தனை

இல்லாதவர்களாகவும் இருக்க க்கூடும்.

## கதையின் இரண்டாம் பாகம்.

காலனியில் செய்தி பரவியது. அவரவர்கள் தங்கள் நண்பர்களுக்கும், மானிலத்தில், தொலை தூரத்திலிருக்கும் தத்தம் உறவினர்களுக்கும் தகவல் சொல்ல ஆரம்பித்தார்கள். தங்கள் மகள் திருமணம், மகனின் உயர்கல்வி போன்ற பெரிய செலவுக்கு வைத்திருந்த பல லட்சங்களை கொண்டு வந்து கொட்ட, வியாபாரிகள் அடுத்த மூன்று மாததில் சில கோடி ரூபாய்களுடன், இரவோடு இரவாக தலைமறைவானார்கள்.

## அறிவில்லாதவர்களையும் சிந்திக்காதவர்கள் ஏமாற்றுவது எத்தனை சுலபம் !

அறிவில் குறைவும் - சற்று அதிகமும்

நாம் வாழுர சமுதாயத்துலே, சில பேருக்கு மற்ற பலரைவிட சிறிதளவு அதிக அறிவுண்டு. அறிவுக்கும் படிப்புக்கும் சம்பந்தம் இல்லை. அப்படிப்பட்ட பலரைவிட சிறிதளவு அதிகமான அறிவு உள்ளவங்க சில பேரு ஒருப்பாங்க.

இப்படி, படிப்படியாக அதிக அறிவு உள்ள மக்கள் எண் ணிக்கையில் குறைஞ்சுட்டே போவாங்க.

ரொம்ப ரொம்ப குறைவான அறிவு உள்ளவர்களுக்கும் ஆடு, மாடு போல பல நாலு கால் உயிர் இனங்களுக்கும் அதிகமா வித்தியாசம் இருக்காது.

நாமள்ளாம் ஆடு மாடு பூன நாயின்னு பிராணிகள வளக்கறோம். அதுகள நாம கேட்டு, அதுங்க சம்மதம் கேட்டு வாங்கியா வாங்கரோம் - விற்கரோம்.

நாம் இழுத்த இழுப்புக்கெல்லாம் அதுங்க வரும். வரல்லேன்னாலும் விட்டுவிட மாட்டொம். இல்லியா?

மாடு, குதிரையெல்லாம் சக்தி இருக்கிற வரை நம்ம வசதிக்கு பயன் படுத்திடுவோம். வயது ஆகி, கிழடு தட்டிச்சினா

அதை அடிமாடா கொடுத்துவாங்க இல்லியா?

ஆடு கோழிங்களே வளக்கறது, அதுங்கள, என்றாவது ஒரு நாள், கொன்னு தின்னத்தானே? இந்த பிராணிங்களுக்கு நம்ம ஏன் வளக்குறாங்கன்னு மட்டும் தெரிகிர அறிவு இருந்தா அது அடிமையா வாழ்ந்து, கொல பண்ணித் தின்கிர மனுசனுக்கு விசுவாசமா இருக்குமா? அதனால், அறிவில்லாத மனுசனுக்கும் பிராணிகளுக்கும் வித்தியாசம் என்ன இருக்கு?

அறிவு குறைவாக இருக்கரதாலே பிடிக்கக் கூடாத தெல்லாம். பிடிச்சுடரோம். பிடிச்ச பிடிய விடரதில்லே. அடிமையாகி விடுவோம். எப்படி? ஆப்பிரிக்கா காட்டுக் குரங்கு மாதிரி.

நமது அறிவின் குறைவு, நெரய பேருக்கு கஷ்டம்-நஷ்டம் வந்தாலும் சிலருக்கு லாபம்: நம் பல மக்களோட அறியாமை அந்த சிலருக்கு வளமையைத் தேடித் தருது. அதுணனால,

சிறிதளவு அதிக அளவு அறிவுள்ளவங்க, அறியாமையை வளர்க்க தீவிரமாக பாடுபடுறாங்க.

இப்போ, குரங்கு கதையப் படிச்சிட்டு. நம்மோட மூதாதைங்களான குரங்கோட குணம் நம்மள எப்படி பாதிக்குதுன்னு தெரிஞ்சுப்போம். அத மனசுலே வாங்கி, இருத்தி,நம்மளோட குர ங்கு கொணத்த்தே விட்டிருவோம். ஏழ்மையிலேந்து தப்பிச்சுதுவோம்.

## கதை :நாமும் குரங்கும்:

நாம், வாழும் விதத்தை அலசினால், பல விதங்களில் நாம் குரங்கின் சந்ததிகள்தான் என்று சந்தேகம் இல்லாமல் தெரிந்து கொள்ளலாம்.

எதையாவது கையில் கிடைத்தால் கெட்டியாக, விடாப்பிடியாக பிடித்துக் கொண்டு அதனால் அடிமையா வதில் குரங்கிற்கு நிகர் நாம் தான்.

## அத்தியாயம் 06

# தான் விரும்பாமலேயே நாம் ஏழையாவது ஏன்?

**முதல்லே ஒரு கதை படிச்சிடுவோம். அதிலேயே பாதி விசயம் தெளிவாயிடும்.**

## கதை:

## குரங்கின் பிடிகள்



உயிர் வகைகளை ஆராயரத்துக்கு வளந்த நாடுங்க கோடிக்கணக்கில் பணச் செலவு செய்யராங்க. நாஷணல் ஜியோகிராபிக், அனிமல் பிளானெட் என்று கணக்கில்லாத அளவு தொலைக் காட்சிகளில் அவர்கள் சாதனைகளைக் காட்டராங்க.

ஒரு கால கட்டத்தில், இந்த முயற்சிகள், மற்ற உயிரினங்கள்

மீதுள்ள அன்பு தான் காரணமோ என்று நினைக்கத் தோன்றும். கடுமையான இயற்கைச் சூழ்னிலைகளில், ஆபத்து மிகுந்த

பகுதிகளில் உள்ளூர் வாசிகளின் ஒத்துழைப்போடு இப்படிப்பட்ட ஆராய்சிகள் நடந்து வரும். சுண்மையில் இந்தவகை விஞ்ஞானிகள் மற்ற உயிரினங்ளைப் பற்றி அ திகமாா அறிந்து அவற்றை அடிமைப்படுத்துவதே இதன் குறிக்கோள்.

இதில் ஒன்று குரங்களைப் பற்றிய தொடர்ந்து செய்யும் ஆராய்ச்சிகள் முக்கியமானவை.

ஆப்பிரிக்காவிலுள்ள காடுகளில் வனவிலங்குகள் உலகப் புகழ் பெற்றவை. அவற்றை உலகின் பல பாகங்களில், பலநாடுகளில் உள்ள மிருகக்காட்சி சாலைகள் வாங்கியுள்ளன.

பிறந்த நிலத்தின் இயற்கைச் சூழலிருந்து மிகவும் மாறுபட்டநகரங்களை அடைந்து, கூண்டுகளில் அடைக்கப்பட்டு, மனிதனுக்கு ஒரு காட்சிப் பொருளாக வாழக் காரணம் என்ன?

## குரங்கு பிடிக்கும் பிடிகள்.

ஆராய்ச்சியாளர்கள், ஒரு கண்ணாடி பாட்டிலை வடிவமைத்தார்கள். பெரிய, பளுவான அந்த பாட்டிலுக்கு குரங்கின் கை நுழையும் அளவிற்கு ஒரு சிறிய முகப்புத் துவாரம் அல்லது வாய். அமைந்திருக்கும். அதே சமயம், குரங்கின் கையில் ஏதாவது ஒரு பொருளை பிடித்திருந்தால், குரங்கு தன் கையை, வெளியே எடுக்க முடியாது.

பாட்டிலின், குரங்குக்குப் பிடித்த, நிலக்கடலையை சிறிது அளவு நிரப்பி, குரங்குகள் நடமாடும் இடங்களில் வைத்து விடுவார்கள்.

சில மணி நேரங்களுக்குப் பிறகு, பல குரங்குகளின் ஒரு கை, பாட்டிலினுள்ளே கிடக்கும் கடலையைப் பிடித்திருக்கும். அதன் காரணமாக கையை வெளியே எடுக்க முடியாத

நிலையில் பாட்டிலுடன் அசையாமல் மணிக்கணக்காக அமர்ந்திருக்கும்.

அதைப் பிடித்து, கூண்டில் அடைத்து உலகின் பல பாகங்களுக்கு அனுப்பி லாபம் அடைவதும் இன்றும் தொடர்கிறது.

கடலைத் தின்ன ஆசை, அடிமையாகக் கூடாது. குரங்கு என்ன செய்ய வேண்டும்? இந்த அவலத்தை குரங்குகள் உணர்ந்தால் பாட்டிலைத் தட்டிவிட்டு கடலையைத் தின்றுவிட்டு ஓட வேண்டும். அதற்கு சிறிதாவது சிந்தனை வேணும். அதை அடையும் வரை குரங்கள் வாழ்வில் அடிமைத்தனம் குறையாது.

எச்சரிக்கை

அருமை மனிதர்களே ! குரங்கின் வம்சாவளிகளே !

எச்சரிக்கையாக இருங்கள். கண்ணாடி பாட்டில்களில் கடலையை நிரப்பி, குரங்குகளை அடிமைப்படுத்துயதைப் போல, நம் சமுதச்சாயத்தில் வெற்றி நடைபோடும் சில கெட்ட தலைவர்கள், வழி தவறிய மதத் தலைவார்கள், பலவித வியாபாரிகள், சினிமா உலகம் என்று பலதரப்பட்ட மக்கள் உங்கள் கைகளில் வித விதமான கடலைகளை கலர் கலரான புட்டிகளில் நிரப்பித் தந்து வ ருகிறார்கள்.

ஜாதி, மதம், இனம், சாராயம் இவை நான்கும் மனிதருக்கு அவசியம் இல்லை.

இனம் - ஜாதிகள் இரண்டும் காலாவதியான மனித அடையாளங்கள்.

இந்தியர் இன்று இல்லாத நாடு இல்லை. இனங்களின் பிரி வுகள் காலாவதியாகிவிட்டது.

இன்றைய மனிதர்கள் ஜாதிகள் அடிப்படைய தொழில் களை செய்வதில்லை. எனவே செய்யும் தொழிலின் அடிப் பதையில் தோன்றிய ஜாதிகளும் காலாவதியாகிவிட்டன.

மதங்கள் மனிதர்களை இணைக்கவும், அமைதியாக

வாழவும் உருவாக்கப் பட்டவை. இன்று தீவிரவாதம் கல வரம் ஆகியவற்றிற்கு மதங்கள் ஒரு அத்தியாவசிய மூலப் பொருளாகிவிட்டது. இவைகளும் பெரும்பாலும் காலாவ தியான ஒரு சமாசாரம்.

மொழிகள் அறிவை வளர்க்க மாத்திரமே பயனாக வேண்டும். சந்தேகமில்லாமல், இவைகள் மக்களைப் பிரித்து ஆள்வதற்காக இல்லை.

நாம் குரங்கென்றால், இனம் ஜாதி மதம் மொழி எல்லாமே நம்மை அடிமைப் படுத்தும் கடலைகள்.

நம்மை ஆட்டிப்படைக்க விரும்பும் கயவர்கள் இவற்றில் ஒன்றை நமது அறியாமை என்கிற பாட்டிலின் அடைத்து வைக்க, சூழ்ச்சியை அறியாத மக்கள், அதைக் கெட்டியாகப் பிடிக்கிறார்கள். இதனால் தங்களுக்குள் பிளவுபட்டு, அறியாமையில் முழுகி அடிமையாக வாழ்ந்து அழிவதைத் தவிற்க முடியாது.

**ரகசியங்கள்**

இந்த கால கட்டங்களில், வியாபாரம், பொருளாதாரம், சேவை என்ற புதிய போர்வையை கண்டுபிடித்து இருக்கிறார்கள். இதில், கோடீஸ்வரர்கள் கூட கோவணாண்டியாக மாறுவதற்கு. கணக்கில்லாத வச திகள் உள்ளன. ஏழைகள் படு ஏழையாகவும் பரம ஏ ழையாகவும் மாறுவதற்கு தினம் தினம் புதிய வசதிகள் தோன்றியவாறு உள்ளன.

மற்றவரை குறை சொல்லும்போது நமது குறைகளையும் சொல்ல வேண்டுமே.

வெவ்வேறு அளவுகளில் மக்களுக்கு இரு குறைகள்।

(1) அறிவதில் திறமை இல்லை. (உண்மை - போலி, நன்மை - தீமை, சரியான பாதை - தவறான பாதை, இதை செய்யலாம் - இதை செய்தால் ஆபத்து எணன்றெல்லாம் பிரித்து அறியும் திறன்மை) அறிவதில் குறைபாடு.

(2) நினைவாற்றலில் குறைபாடு.

குறைந்த அளவு நினைவாற்றல் குறைபாடு உள்ளவர்களே தடுமாறும் இந்த நாளிலே, சாதாரண மக்கள், சிந்தித்துச் செயல்படும் வழி எதுவும் அறியாது, னினைவாற்றலின் அவசியமும் அறிந்திடாமல் நம்பிக்கையின் அடிப்படை யில் மாத்திரமே வாழும் மக்களின் கதி என்னவாகும்?

**இவற்றை கதைகளாக பார்க்கலாமா? இந்தக் கதைகள் நமது ஆழ்மனதில் தங்கியிருந்து நாம் ஏழையாகாமல் வாழ்வதற்கு உதவும் .**

**கலப்பட உணவு மற்றும் போலி மருந்து** வியாபாரிகள்

உற்பத்தியாளரிடம் பொருட்களைப் பெற்று, தேவைப் படுவருக்கு வினியோகம் செய்வது வியாபாரிகளின் தொழில் தர்மம்.

ஆனால் தர்மத்தில் தவறிய வியாபாரிகள் இன்று அதிகரித்து விட்டார்கள்.

அதிக லாபம் அடைய இவர்கள் தேந்தெடுப்பது:

(1) போலி மருந்து. (2) கலப்பட உணவு,

வட இந்தியாவில் போலி மருந்துகளைத் தயாரித்து விற்பவர்கள் அவ்வப்போது பிடிக்கப்படுகிறார்கள்.

வினியோகிப்படும் பாலில் யூரியா முதலான பொருட்கள் கலப்படம் செய்ததது மும்பாயில் பல முறை பிடிக்கப்பட்டார்கள்.

பெட்ரோல் டீசல் போன்ற எரி பொருளுடன் மண்ணெண் ணை கலப்படம்.

வெண்ணையில் - மிருகக் கொழுப்பு பன்றி இறைச்சி மற்றும் கணக்கில்லாத பொருட்களுடன் கலப்படம் செய்யப்பட்டு அமோகமாக விற்பனை செய்யப்படுவது, சமீப காலத்தில் கர்னாடக மானிலத்தில் கண்டு பிடிக்கப்பட்டது.

உணவு எண்ணை, மிளகு, மஞ்சள் பொடி, மிளகாய்த் தூள் என்று கலப்படம் செய்யப்படாத உணவு மிக மிகக் குறைவு. அதனால் கலப்படம் செய்யப்படும் பட்டியிலோ

மிகப் பெரியது.

எனவே பட்டியல் போடுவதை நிறுத்திவிட்டு விவாதம் செய்வோம்.

சட்டை செய்யாத சட்டங்கள்

கலப்படம் செய்பவர்களுக்கு, இனிமேலும் இந்த தவறுகள் நேராதவகையில் கடும் தண்டனைகள் அளிக்கப்பட்டதாக எந்த செய்தியும் கேட்டதாகவோ, படித்ததாகவோ நினைவில் இல்லை.

நமது சட்ட-திட்டங்கள் துருப்பிடித்தவை. காலத்தையும் தேவையை அனுசரித்து மாற்றங்கள் செய்யப்படவில்லை. சட்டக் கமிஷன் ஒன்று இருப்பதாகக் கேள்வி. அவர்களின் பரிந்துரைகளை ஆட்சியில் இருந்த எந்த அரசும் சட்டை செய்யவில்லை என்று புகார் எழுந்தது. அதையும் அரசியல் கட்சிகள் சட்டை செய்யவில்லை.

அரசாங்க அலுவலர்கள் தவறு செய்பவர்களை சட்டத்தின் முன் 100 பேரை நிறுத்தினால், தண்டனை பெறுவது சுமார் 2 நபர்தான். அவர்களும் ஜாமீனில் வெளியே வந்து, அதே குற்றத்தை குறைவில்லாமல் செய்வதும் புதியதில்லை.

புதிய சட்டங்கள், தண்டனைகள் இயற்றப்பட வேண்டும். தண்டனைகள் தவறு செய்வோரை மட்டுமில்லாமல், தவறு செய்ய நினைப்பவவரியும் பௌஅம் கொள்ள வைக்கும் வ்வக்கையில் அமைய வேண்டும்.

சட்டை செய்யப்படாத நமது சட்டம், ஐ பி சி என்ற பூதம் ஆங்கிலேய ஆட்சியில் நுழைந்தது.

தனது அடிமை நாடாக இருந்த அயர்லாந்தில் உபயோகப்படுத்த வேண்டி, பல நூறு வருடங்களுக்கு முன்னமே தயாரித்த சட்டம்.

நம் நாட்டை அடிமைப்படுத்தி ஆண்டு வந்த ஆங்கிலேயர் தந்துவிட, குரங்கைப் போல, நாம் கெட்டியாகப் பிடித்து வைத்திருக்கிறோம்.

இது மக்கள் விரோதமானது மட்டுமில்லை, நமது நாட்டைக்

கொள்ளை அடிக்கும் செல்வந்தர்களுக்கும் ஆட்சியில் உள்ளவர்களுக்கும் மிகவும் பயன் தருவது. காந்தி முதலான லட்சக்கணக்கான முன்னோர் பெற்றுத் தந்த சுதந்திரம் மக்களுக்கு இன்று வரை பயன் இல்லாமல் போக முக்கிய காரணம் இதுதான்.

இத அயர்லாந்து மக்கள அடக்கி ஆள, உருவாக்கினது தான். (அயர்லாந்து குற்றச் சட்டம், இந்தியன் குற்றச் சட்டம் - இரண்டுக்கும் அட்டைதான் வேறு வேறாம். உள்ளே வார்த்தைக்கு வார்த்தை வித்தியாசமே இல்லியாமே)

இதுலே என்ன தப்பு? இதை வைத்து பொது மக்களோட சின்ன தவறுக்கும் பெரிய தண்டனை தரலாம்.

அதே சமயம் பதவியில் உள்ளவர்களும், அவங்களுக்கு ஜாலரா போடுகின்ர மக்கள் யாரா இருன்தாலும், எந்தப் பெரிய தவறு செஞ்சாலும் தண்டனை எதுவும் இல்லாம தப்பிச்சுக்க வசதியா பண்ணிருக்காங்க.

சுவாமி ராம்தேவு என்கிற சாமியாரு. இத ஓடப்புலே போட்டுட்டு, வெள்ளக்காரங்க நாட்டுலெ இருக்கிறது போல, எல்லாருக்கும் பொதுவா, ஒரு சட்டம் கொண்டுவரணுமின்னு குதிக்கிறாரு. பல வக்கீலுங்க என்ன சட்டம் எங்கே படிச்சானுகளோ. இதப் பத்தி அவங்க கேட்டதில்லையாமே.

இந்த இத்துப்போன, மக்கள் விரோத சட்டத்த, மாற்றாமல் எல்லா அரசியல் கட்சிளும் அறுபது வருசமா காப்பாத்திட்டு வருதாமே!

தப்பு பண்றவன் எவனா இருந்தாலும், மந்திரியோ, பணக்காரனோ, ஏழையோ பார பட்சம் இல்லாம வேகமா தண்டனை தரும் புதிய சட்டங்களை உருவாக்கணும். அதை வேகமா செயல் படுத்தணும். அந்த நாளு வர வரைக்கும், ஏழைகளும், எப்ப ஏழையாவாங்களோன்னு தெரியாமல் ஒட்டுலே நிக்கராங்கள்ளே, அவங்களும் ரொம்ப எச்சரிக்கையாக இருக்கணும்.

**வியாபாரிகள் சமுதாயத்துக்கு அவசியம். ஆனால் ……**

எங்கேயோ ராவும் பகலும் ஒழைச்சு மக்களுக்கு தேவையானதை உற்பத்தி பண்ணுராங்க. அதை பாக்கி பேருக்கு கொண்டு சேத்தாதான் உற்பத்தி பண்றவன் வாழலாம். பொருளைப் பயன் படுத்தரவங்களுக்கும் தேவை பூர்த்தியாயிடும்.

அதனால எந்த சமூகத்துக்கும் வியாபாரிங்க அவசியம். ஆனாக்க, எந்த தொழில்லேயும் ஒரு தொழில் தர்மமுன்னு ஒண்ணு இருக்கு. லாபம் இல்லாம தொழில் பண்ணக் கூடாது. அதே போல, இவ்வளவு லாபந்தான் வைக்கணுமுனு ஒரு கட்டுப்பாடு இருக்கணும்.

உழச்சு உற்பத்தி பண்றவன வயத்துலே அடிச்சு, அடிமாட்டு விலைக்கு வாங்கி, பதுக்கி வச்சு, வெலய ஏத்தி, கொள்ளை லாபம் அடிக்கிறது - இது எல்லாமே அதிகாரிகள் தலைவர்கள் தயவு இல்லாமே நடக்க முடியாது. வளர் ந்த நாடுகளிலே இப்படி நடக்காது.

சமீபத்துலே ஸ்பெயின் நாட்டுலேந்து ஒரு செய்தி. தக்காளிய விவசாயிட்டே இருந்து வாங்கின விலையப் போல 3 மடங்கு விலைக்கு மக்களுக்கு விற்றால், பெரிய குற்றம் மட்டும் இல்லே, இதை ஒர் மாபியா வேலை என்று சொல்றாங்க. இது நம்ம ஊர்லே தினம் நடக்குற விசயம்.

உற்பத்தி பண்றவனுக்கு ஒரு நியாயமான வெல, வாங்கரவனுக்கு நியாயமான வெல, நடுவுலே இருக்காங்கள்ளே அவங்களுக்கும் ஒரு நியாயமான தொக.

இதுக்கு நடுவுலே கோளாறு வந்தாக்க சட்டம் உள்ளே நொழயணும், தண்டன பெரிசா இருக்கணும். எப்படியாச்சும் ஆட்சியப் பிடிக்கணுமின்னு, தலைவருங்க வியாபாரியோட கூட்டு சேந்து தப்பு பண்ணினாக்க மக்கள் ஒருத்தரும் ஜனநாயக முறையிலே - அன்னா ஹசாரே பண்றாருல்ல - அப்படி தட்டிக் கேக்கணும்.

வியாபாரிங்க லாபநோக்குடன் செய்யுர கலப்படப் பொருட்கள் பல உடலுக்கு கேடு உண்டாக்கிடும். போலி மருந்துகள் இருக்குற நோயகளை தீவிரமாக்கிரும். ஒழச்சு சம்பாதிச்ச காசு வீணாவுல கரைஞ்சு போயிரும், நோய்கள் நம்மை விடாம வெறட்டும்.

## வியாபாரிகளின் கூட்டணி - எச்சரிக்கை:

அரசியவாதிங்க ஓட்டு கேக்க இப்பெல்லாம் தனியா வாரதில்லெ.

வெள்ளக்காரங்க மக்கள் பிரிச்சு ஆளரத சொல்லிக் கொடுத்துட்டு போயிட்டான். ஆடு மாடுங்களுக்கு உள்ள அறிவே உள்ளவங்க அதிகமா இணூருக்காங்க. அவர்களை ஜாதி, மதம், மொழின்னு பிரிக்கிரது சுலபம்.

பிரிஞ்ச மக்களோகூட தலைவருங்க இரண்டு -மூணு கூட்டமா சேந்திருவாங்க. மாறி மாறி அதிகாரத்துலே ஒக்காரராங்க. ஓட்டு வாங்க என்ன வேணும்னாலும் செ ால்லு வாங்க, செய்வாங்க. ஓட்டுப் போடாட்டி ஜனநாயகம் செத்துடுமாம். அதுக்காக ஏழங்களுக்கு காசு கொடுத்தாவது ஓட்டு போட சொல்றாங்க. சினிமாக்காரங்கள வச்சு ஓட்டு கேட்க வைக்குராங்க.

தலைவருங்களப் பாத்து, வியாபாரிங்களும் வேண்டாத பல விசயங்களைக் கத்துக்கிட்டாங்க. சினிமாக்காரன், கிரிக்கெட் விளையாடராங்கள்ளே அவங்களோட கூட்டணி வச்சுருவாங்க.

மக்கள் ஏழையாக முக்கிய இரண்டு பெரிய குறைகள் காரணமா இருக்கு. மொதல்லே அறிவ வளக்காதது. இரண்டாவது தெரிஞ்சத ஒண்ணு, ரெண்டையானும் நினைவுலே வச்சுக்கிர சக்தி. இந்த இரண்டு பெரிய பிரச்சன போதாதுன்னு ஒரு மன வியாதி கூட்டு சேந்திருச்சு.

அந்த மனசு சம்ந்தமான வியாதி என்னன்னாக்க. கிளு கிளுப்பு உள்ள கேளிக்கையிலேயும், ஆபாசத்துலேயும் ஒரு கவர்ச்சி, கிசு கிசு லேயும் அக்கப்போர்லேயும் நெறய ஆர்வம். கனவுத் தொழிற்சாலலே உற்பத்தி பண்ணின

பொருட்களில் - சினிமா - மேலே ஒரு அலாதி மோகம். அதுலே நடிகருங்களை கடவுளாந் நினக்கின்ர ஒரு சே ாகம்.

அறிவில்லாதவன கவுக்கரத்துக்கு, இந்த மூணு போதாத?

நமக்கு தெரிஞ்ச சினிமா நடிகைங்க நடிகருங்க, விளையாட்டு வீரர்கள், அழகாயிருக்குர பொண்ணுங்க அழகு படுத்தப்பட்ட பொண்ணுங்க என்று வகை வகையான மக்களுடன் வியாபாரிங கூட்டணி வைப்பாங்க.

இவர்களை நாம் அடிக்கடி தொலைக் காட்சியில் பாக்குறோமில்லே. இவங்களை நம்ம நினைவிலே இருப்பாங்க. இவங்களோடு விக்கவேண்டிய பொருளையும் இணைச்சு விளம்பரம் செய்யராங்க.

இப்படி விளம்பரம் பண்ண கொள்ளையா செலவாகும் இல்லியா. அதுவும் வாங்கரவன் தலையிலேதானே வரும்.

தேவையில்லாத, தரம் கொரஞ்ச பொருளே அதிக வெலக்கி நம்ம தலையில் கட்டுரது வியாபாரிக்கு எளிசாயிடிச்சு.

விளம்பர யுக்திகள் மக்களை ஏழையாக்குவதில் சக்தி வாய்ந்தவை.

இதன் அடிப்படை, எறும்பு ஊற கல்லும் கரையும் என்ற ஒரு முதுமொழி. எறும்பு தொடர்ந்து எண்ணிக்கை இல்லாத அளவு கல்லுமேல நடக்கும்போது, அந்தப் பாதையிலுள்ள கல்லைக் கூட கரைத்துவிடும். (எறும்பூரக் கல்லும் தேயும்)

பள்ளியில், தேர்வில் குறைந்த மதிப்பெண் பெறும் ஒரு மாணவரை, மறந்து போகும் பாடத்தை பல முறை படிக்கவோ, எழுதுச் சொல்றதுண்டு இல்லையா?

புரோகிதர்கள், மற்றும் மதத்துடன் இணைந்த தொழிலில் இருப்பவர்கள் வேதபாராயணம் என்றும், பலவித வட மொழியில், பொருள் அறியாத மந்திரங்களை மனதில் பதிய வைப்பதற்கும் இதே அடிப்படைதான்.

செய்த வேலையைத் திரும்பத் திருமபச் செய்வதனால்,

அதைச் செய்வது எளிதாவதும், அதில் திறமை கூடுவதும் எதனால் -மனதில் ஆழமாக பதிவதனால், தானே.

இந்த வியாபாரி-நக்ஷத்திரக் கூட்டணி நம்மை ஏழைகளாகச் செய்யும் சதிகளை தகர்த்து எறிய ஒரே வழி, சிந்திக்கும் தி றனை வளர்த்துக் கொள்வதே!

சிந்திக்கும் திறனை வளர்த்துக் கொள்வது அத்தன கடினம் இல்லே. அதையும் பின்னாலே பாத்துடுவோம்.




**வியாபாரிகள் தரும் இலவசம் என்னும் மயக்கம்**

யாரும் யாருக்கும் இலவசமாக எதுவும் என்றுமே தாரதில்லே. எப்பவாச்சும், நல்ல மனுசங்க கொஞ்சம் பேரு இலவசமா ஆலோசன தருவாங்க. தருமம் பண்றேன்னு இலவசமா (நமக்கும் வறுமை வந்திருமோன்னு பயத்திலே சில ஏழைங்களுக்கு சோறு போடராங்க. அதிலும் சில பேரு புண்ணியம் தேடராங்க. ஆனாக்க, வியாபாரிங்க, இலவசம்னாக்க, நிச்சயமா, அது ஏழைங்கள கவுக்க, ஒரு

திட்டமுன்னு புரிஞ்சுக்கணும்.

காலம் காலமாக மாயை என்கிற ஒரு சக்தி இருக்குது, அது மனுசங்களே ஆட்டிவைக்குதுன்னு பெரிய மனுசங்க, பாட்டிங்க சொல்லிக் கேள்விப் பட்டிருக்கோம்.

ஒலகத்த படச்ச பிரம்மாவோட உதவியாளருதான் மாயையன்றாங்க. தன் சக்தியினால, அண்டத்திலிருக்குர உயிர்கள் எல்லாத்தையும் நிக்காம ஓட வச்சுருவாங்கன்னு சொல்லி நடாஜ் சார் சொல்லி நான் கேட்டிருக்கேன்.

ஆமாம், மாயையின்னா என்ன?

இல்லாத ஒண்ணு இருக்கிராபுல போல நம்ம மனசுக்கு தோணும். இல்லே, இருக்கர ஒண்ணை இல்லாதது போலவும் நம்மள நினைக்க வைச்சுருமாம். இதுதான் மாயை பண்ற சேட்டைன்றாங்க.

நம்ம உலகத்திலேயே ஒரே ஒரு மாயா இல்லீங்க, பல மாயாவிங்க நம்மை சுத்தி வாராங்க. இவங்களோட முக்கியமான வேல மனுசங்கள ஏழைழயாக மாற்றரது தாங்க.

மக்களெ ஏழையாக்க வியாபாரிகள் பயன் படுத்துர ஒரு மாயா வினேதம், இலவசங்கள், தள்ளுபடிகள்.

வியாபாரிகளின் வெற்றி ரகசியத்தைப் பின் பற்றி பல அரசியல்வாதிகளும் மாயாவிகளாக மாறிட்டாங்க. எங்கள ஜெயிக்க வச்சா, இத்த்தாரோம், அதத் தாரோமுன்னு செ ால்லுவாங்க.

இலவசம் என்ற பெயரில் விற்பனையாகாத பொருட்களை நம்மை வாங்க வைக்குர தந்திரம்.

**தள்ளுபடிகள்:**

ஆடித் தள்ளுபடி, தீபாவளித் தள்ளுபடி. பொங்கல் தள்ளுபடி.

எம் ஆர் பி ன்னு ஒண்ணு. ரொம்ப அதிக வெல அச்சடிச்சுருவாங்க. அதிகபட்ச விலை. அதுலெ

தள்ளுபடி. (இதயே, ஆடம்பரம் இல்லாத தெரு மூலைலே இருக்கற கடேல 25% லே ந்து 35% வரைக்கும் தள்ளுபடிலே, கிடைக்கும்.

இப்படி இலவசங்களுக்கு ஆசைப்பட்டு தேவையில்லாத பொருட்களை வாங்கி எல்லோரும் ஏழையாரது இப்பெல்லாம் சகஜமாயிருச்சு.

**இலவசங்கள்**

ஒரு பாண்ட் வாங்கினால் ஒரு சட்டை இனாம்.

ஒரு பிஸ்கட் பாக்கெட்வாங்கினால் மற்றொன்று

இலவசம்.

அதே விலையில் 10% அதிகமாக பிஸ்கட், டூத்பேஸ்ட், காபிப்பொடி.

லாப்டாப் வாங்கினா, ஒரு காரு (லாட்டரி முறையிலே ) கெடைக்குமாம்.

ஆந்திராலே இருந்தப்போ ஒருத்தன ஒருத்தன் கேலி பண்றத்துக்கு சொல்லுவாங்க.

**இவன் ப்ரீய கொடுத்தா பினாயிலக்கூட குடிச்சிருவான்னு.**

ஏழ்மையிலேருந்து விடுபடனுமுன்னா ஒரு உண்மைய மறக்கவே கூடாது. இலவங்கள் மேல ஆசப்பட்டா, யாருமே ஏழையாவுரத தவிற்க முடியாது.

**இலவசம் கொண்டு வந்த சிகரேட்டும் டீயும்.**

**எப்படி நாம சிகரெட் டீ பழக்கத்திற்கு அடிமையான கதை நெரய பேத்துக்கு தெரியாது.**

அடிமையானத்துடுக்கு காரணம் என்ன தெரியுமா ஏழைங்களுக்கு - பாழாப்போன இலவசத்து மேல உள்ள காதலுங்க!

ஒரு காலத்தில் பன்னாட்டு மற்றும் இந்நாட்டு சிகரெட்டு மற்றும் டீ தயாரிப்பாளர்களும், பெட்டிக்கடைகளுலே இந் த இரண்டையும், வச்சிட்டு, யாரு வேணும்னாலும் இலவச மா எடுக்கிடலாமுன்னு போர்டு போட்டானுக. கொஞ்சம்

கொஞசமா ஒருத்தன் ரண்டு பேருன்னு எடுத்துப் பழகி மத்தவனையும் மாட்டிவிட்டானுக.

வியாரிங்க, அப்புரமும் கொஞ்ச நாளக்கி ப்ரீயா கொடுத்துக் கிட்டே வந்தாங்க. அப்புரமா கொஞச நாளைக்கி தாமதமா சப்ளை வருமாம். அப்போ இலவச பார்டிங்கள்ளாம் கொதிச்சிருவானுகளாம்.

அப்புரமா, கொரஞ்ச காசுக்கு வித்தாங்களாம். இன்னிக்கி பாருங்க, என்னா வெல? அந்தக் காசுலே பொஞ்ச ாதி புள்ளங்களுக்கு பழம் வாங்கித்தரலம். காய் வாங்கி எல்லாரும் தின்னலாம். பொக உள்ளபோயி மனுசனே இல்லே தின்னுது. வேணுமாய்யா இதெல்லாம்.

ஆரம்பத்துலே ஸ்டைலா புகைய இழுத்து உடரான். வயசு ஆனப்புரம், புகையில்லே இவன இழுத்துக்கிட்டிருக்கு.

பல காலங்களுக்கு முன்னால் பாட்டன் முப்பாட்டன் தொடங்கி வச்சது வள்ளலாரு தொடங்கிவச்ச சமயல் அடுப்பு போல விடாம இன்னிவரக்கும் எரியுது.

அடிமைத்தனம் ஒரு தொத்துவியாதி. தானும் அன்று அடிமையாகி இன்று தன் சந்ததிகள் அனைத்தையும் சிகரெட்டு மற்றும் பல புகையிலையின் அடிப்படையில் தயாராகும் பொருட்களுக்கு அடிமையாக்கியது எது? இலவசம்.

அன்றைய இலவசம், வருடம் தோரும் சில லட்சம் மக்கள் இன்று கான்சர் போன்ற கொடிய வியாதிகளால் அவதிப்பட்டு சாவராங்க.

இந்தக் கொடுமை. நம் சமுதாயத்தை விட்டு நகருவற்கான அறிகுறிகள் எதுவுமே இல்லை.

**இண்டர்நெட் - ஈமெயில் :**

பத்து வருசங்களுக்கு முன்னாலிருந்து இன்டெர்நெட்டும், ஈமெயிலும் இலவசம் என்றே சொல்ல வேண்டும். இன்று நம்மில் பல ஆளுங்க இதற்கு. அடிமை.

அடிமைத்தனம் பெருகிவருகிறது. அதன் முக்கிய

காரணம், இவை இலவசம். இன்று விளம்பரம் மூலம், இதை நிர்வகிக்கிரவங்க நெறய சம்பாதிக்கராங்க. கொஞ்சம் கொஞுமா, ஒரு பெரிய பில் ஒன்று, மாதா மாதட்ம் நம் எல்லோரையும் துரத்தப் போகுது.

**மோசமான மருத்துவர்கள்**

இன்றய தேதியில் தொழிற்கல்வி என்று எடுத்துக்கிட்டா அதிகமான செலவு அலோபதி மருத்துவம் படிக்கத்தான்.

பல லட்சங்கள கொட்டணும். அவ்வளோ முதலீடு செஞ்சு படிச்சாக்க கல்லூரிலேருந்து வெளியே வந்த மறுநாளே ஒரு மருத்துவராவரா ஆவுரதில்லே. சுமாரான வருமானம் கெடைக்க பல வருசன்ங்க ஆயிரும்.

தெறமைய வளத்துக்க ஒழைக்கணும். வருமானம் அதிகரிக்க இன்னமும் நெரய வருசம் பிடிக்கும். போட்ட பணத்த பிடிக்க ஒரு ஆர்வம். விடாத பணப்பசி இதெல்லாம் காத்திருகுமா? என்ன செய்ய?

இவங்களோட பணப்பசியை தீக்க மருந்து உற்பத்தியாளருங்க மருந்து வியாபாரிங்க பல திட்டங்கள் வச்சிருக்கானுன்ங்க. நோயாளிங்களுக்கு இவ்வளவு மருந்தை (எழுதினாக்க) விற்கிரத்துக்கு உதவி பண்ணினாக்க ஒரு பிரிட்ஜ், இதற்கு மேலே ஒரு டெலிவிச ன், அதுக்கும் மேல ஒரு காருன்னு பல திட்டங்களே போட்டு வச்சிருக்கானுக. கேட்டிங்களா?

அதுலே இன்னமும் விசயம் இருக்கு. அலோபதி உண்மையா தயாரிப்பாளருங்க தரான்ங்கள்ளே அந்த மருந்துகளே ஆபத்தான விசயம். இதுலே பாதிக்கி மேலே போலி மருந்துங்க. கேக்கணுமா. வியாதியாலே ச ாவரது மேலா. அதிகப்படியான தேவையில்லாத மருந்து சாப்பிட்டுச் சாவரது பரவாயில்லையா, அதுவுமில்லே, போலி மருந்துன்ங்க சாப்பிட்டதாலே சாவரது ஒச்சத்தியா. நமக்கு என்ன சாய்ஸ் பாருன்ங்க.

ஒடம்பு சரியில்லேன்னு டாக்டராண்ட போன தேவையில்லாத பல மருத்துவப் பரிசோதனை - சிபாரிசு

செய்யரது வழக்கமா போச்சு. இவனுக அடிடுக்கிற கூத்துலே கடேசிய வர்ர பில்லப் பாத்து கொஞ்ச நஞ்சம் உயிரும் பக்குனு போயிரும்.

**செத்தவனுக்கு வைத்தியம் பாக்கும் மருத்துவ மனைகள்:**

ஒரு நல்ல, மனிதாபிமானம் உள்ள டாக்டரய்யா, ரொம்ப வருசமாப் பழகினவன்ங்க சொல்லிக் கேட்டிருக்கிறோம். செத்தே கொண்டுவருவாங்க சில நோயாளின்ங்களே.

எப்புடியானும் பொழக்க வச்சிரலாமுன்னு ஒரு நம்பிக்கேலே சொந்தக்காரங்க கொண்டாருவானுங்க. டாக்டருங்க செத்தவனுக்கு மருத்துவம் பாத்து பில்லு. நாளு முளுக்க ஊசி போட்டேன்னு, ஐசியூ செலவு அது இதுன்னு பில்லு போட்டு செத்தவங்க கூட வாரவனையும் ஏழையாக்கிடுவானுங்க.

இதெல்லாம் நடக்கறது பெரிய கார்ப்பொரேட் மருத்துவ மனைலே. இதெப் பாத்து சின்னவங்களும் படிச்சிட்டு வாராங்க எத்தினியோ வாட்டி செய்தியா வந்துடிச்சு, சினிமாலே காட்ரானுக. ஆனா சுரண்டல் மட்டும் நிக்கல்லே, நிக்காது கூட.

ஏன்னாக்க, மக்கள் அவங்களோட அறிவுக் கண்ணே தொறக்கவே இல்லை.

**இலவச மருத்துவப் பரிசோதனை.**

இந்தக் காலகட்டத்தில், ஸ்வாமி ராம்தேவ், ஸ்ரீ ஸ்ரீ ரவிஷங்கர் மாதிரி பலர் வந்துட்டாங்க.

ஒரு நாளக்கி சில நிமிசங்களை இவங்க சொலரத கேட்டு செஞ்சாக்க, மருத்துவரோ மருந்துகளோ அவசியமில்லை. மூச்சுப் பயிச்சி செஞ்சு பல பேருக்கு பல வியாதிங்க சுலபமா குணமாயிருச்சாம். நடராஜன் சாரு நெரய இதப்பத்தி விஞ்ஞான ரூட்டுலெ அருமையா விளக்கம் தருவாரு.

வடக்கே ரொம்பப் பேரு இதே பழகரானுங்க, ஊருக்கு ஊரு காலைலே கூட்டமா இருந்துட்டு பயிற்சி பண்றாங்க. இந்த டாக்டருங்க அடிக்கிற கூத்துலே நெரயப் பேரு தீவிரமா உடற் பயிற்சி, யோகா, மூச்சுப் பயிற்சின்னு

இறங்கிட்டாங்க.

ஒரு கருத்துக் கணிப்பின்படி, சுமார் பத்து கோடி மக்கள் இப்படி யோகா - மூச்சுப்பயிற்சி செய்து வராங்களாம்.

கார்ப்பொரேட் மருத்துவ மனைலே கூட்டம் வருமுன்னு எதிர்பார்த்து மூலா மூலைக்கி பெரிசா கட்டிருக்கானுக. எதிர்பார்த்த கூட்டம் இல்லேலே அதோட பன்னாட்டு மருந்து தயாரிப்பாளர்களுக்கும் எதிர்பார்த்த அளவு வியாபாரம் இல்லை. என்ன பண்ணரதுன்னு பாத்தானுக.

இதனாலே, முதியோருக்கு இலவச மருத்துவ சோதனை மூகாம்னு ஒரு அயிட்டம். நடுத்தர வருமானம் மக்கள் வாழும் குடியிருப்புகள்ளே நாடகங்க காட்டுவாங்க.

ஓசிலே டெஸ்டு பண்ணிக்கறேன்னு சில மடையணனுக போயி சிக்கிருவானுக. இதிலே சிக்கிவனுக்கு, மேலும் பல சோதனை செய்யணும். உன் கண்டிசன் சீரியசா இருக்குன்னு பயம் காட்டிருவானுக. எப்படியோ சில ஆயிரங்களே உருவி தேவையே இல்லாத மருந்துங்கள தினிச்சு ஒரு மாதிரியா ஆக்கறவரைக்கும் விடமாட்டாங்க.

**மருத்துவச் சான்றிதழ்:**

அரசாங்க வேலை கிடைத்து விட்டதா? பல ஆயிரங்களை தராவிட்டால், தகுதி இல்லை என்று மருத்துவர் குழு, ஒரு பொய்யான சான்றிதழைத் தருவாங்க. பயமுருத்தரது யாரு? பியூனுக.

சின்ன உத்தியோகம் பாக்கராருன்னு அலச்சியம் பண்ணிராதிங்க. நம்ம நடராஜ் சாரையே கவுத்துட்டானுக. ஆனாக்க இவுராவது விடரதாவுது. கடேசிவர நீயா நானான்னு அரசாங்க மருத்துவர்கள் ஒரு பக்கம் இவரு ஒரு பக்கம். நல்ல. மருத்துவப் பேராசிரியர் ஒருத்தரோட ஒத்தாசயும் இருந்திச்சா. கிளிச்சுப் புட்டேன்னாரு. கடேசி வர காசே கொடுக்கல்லேன்னாரு.

கொடுக்கல்லேன்னா பல ஏழைங்களுக்கு கிடைத்த வேலை கையவிட்டு வேல நழுவிடும். இந்தக் கொடுமையை, பல ஆண்டுக்களுக்கு முன்னால் இருந்திச்சு. இது இன்றும்

தொடருதுய்யா.

எத்தனை ஏழைங்க அரசாங்க அதிகாரியோட சண்ட போட முடியுமா?

**இலவச மருத்துவ சிகிச்சை:**

அரசாங்க ஆசுபத்திரிலேயெ நசமாவே சிகிச்சை கெடைக்கணுமா? சில ஆயிரம் கை மாரோணும். கை மாறிட்டா ஆபரேஷன் சக்சஸ். இல்லே நோய் அப்படியே இருக்கும். ஏழைங்களுக்காகன்னு மக்கள் வரிப்பணத்துலே நடத்தர ஆசுபத்திரி.

மனுசன் பொணமானப்புரம் கிடங்குன்னு இருக்கும்லே. பாடி அங்கே போயிரும். அங்கேந்து பொணத்த எடுக்க, பணத்த எடுக்கணும். அங்கே ராசாங்கம் பண்ரது யாரு ? மருத்துவம் படிச்சவனில்லே நம்மளப்போல தரித்திரம் புடிச்ச ஒரு ஏழைதானய்யா.

அரசாங்கம் இலவசம்னாக்கூட கைவசம் பணமில்லாட்ட இலவச ஆசுபத்திரிலே மருத்துவம் எதுவே கெடைக்காது.

**இன்ஷ்யூரென்ஸ் என்னும் பூதம்**

ஒரு காலத்துல அரசு சார்ந்த சில நிறுவனங்கள் மாத்திரமே மக்களை ஏழையாக்குற இந்த திட்டம் தீட்டி பாடுபட்டு வந்துது. எந்த பொது நிறுவனமுமே சிறப்பா செயல்படாதுன்னு எல்லாருக்கும் தெரியும் இல்லியா.

அதுனாலே மக்கள் குறைந்த அளவுல. மொட்டையானாங்க. இன்று நிலமை மாறிடுச்சி.

இன்னிக்கி பல நாட்டு நிறுவனங்கள் உள்நாட்டு. நிறுவனங்களோட கூட்டு சேந்துகிட்டு, அமக்களமா வியாபாரம் பண்ணுரானுக.

இந்த தொழில்லே முதலீடு எதுக்கு தெரியுமா? சவரத் தொழிலாளிக்கி என்ன வேணுமோ அது போல ரண்டு. ஒட்ட செரக்கிறதுக்கு கூர்மையான கத்து. சுலபமா அந்த காரியத்த முடிக்க சோப்பு.

இன்னிக்கி போயி ஒரு பாலிசி எடுக்கல்லேன்னா,

ரிடயரானவுட்டு சீரளிஞ்சிருவீங்கன்னு விளம்பரம் பண்ணுவானுக பாருங்க. அதுலே சிந்திக்க தெரிஞ்ச வனே சில சமயம் சீரழிஞ்சுடுவான். மத்தவன் கதை கேட்டுக்காமலே புரிஞ்சுக்கலாம்.

பத்து வருசத்துக்கப்பரம் உயிர் வாழ ஒரு ஆளுக்கு கொரஞ்சது ஒரு லட்சம் ரூபாய்னாச்சும் வேணும் . உங்களுக்கு மாசா மாசம் எத்தன லட்சம் வேணுமின்னு ஒரு கணக்கு காமிப்பானுக. யோசிச்சி அப்புரம், மாசா மாசம் பிரீமியம் கட்டிக்கிடே வாங்க.

இதனால் பணம் கட்ரவனுக்கு என்ன பயன்னு பாப்போம்.

இப்படிப்பட்ட, அரசாங்கத்தால அங்கீகாரம் கெடச்ச முடி-உள்ளவங்கள மொட்டையடிச்சு ஏழையாக்குர திட்டத்துக்கு என்ன முதலீடு தேவப்படுது?.

(1) பயமுருத்தரத்துக்கு நல்ல விளம்பரம்: மேலே சொன்ன மாதிரி, மக்கள் மனசுலே ஒரு பீதியக் கெளப்பரத்துக்கு விதவிதமா விளம்பரம் தயார் பண்றதுக்கு செம மூளையுள்ள ஆளுங்க, இவங்களுக்கு கோடீல சம்பளம் கிடைக்கும்னு சொல்ராங்க.

இதெ மக்களுக்கு சொல்றத்துக்கு சரியான ஆர்டிஸ்டு, எவண்டா அகப்படுவான்னு தேடி புடிச்சுட்டுவர எம், பி, ஏ படிச்சுட்டு சுத்துர பையங்க. மனுசன் போர இடம், படிக்குற செய்தித் தாள், பப்ளிக் கழிப்பறை, பத்திரிக்கைன்னு மனுசன் கண்ணு படர எடமெல்லாம் வைக்கணுமின்னா - ஆவுர மொத்த விளம்பர செலவு.

(2) மூலக்கு மூல பாலிசி விக்கிற ஆளுங்க. அதாவது, மடையனுகள தேடி கண்டுபுடிச்சு ஒப்படக்க ஆளுங்க. அவனுகளுக்கு சம்பளம். ஊக்கப்பணம்.

விசயம் தெரிஞ்ச ஆளுங்க, எந்தக் காலத்துலேயும் இருந்தாங்க. இவனுகள அடயாளம் கண்டு ஓடிருவானுக,

முனிசிபாலிடிலே, ரோட்லே சுத்துர நாய்களெ பிடிக்க ஆளு வச்சுருப்பாங்க. அவனுக கையிலே ஒரு நீள கம்பு. அதுலே சுருக்கு போடற மாதிரி ஒரு கம்பி இருக்கும். அவனுகள

தூரத்துலே பாக்கும்போது தெரு நாயெல்லாம் ஓடும் பாருங்க. அப்ப, அதுக்குக் கூட எத்தன அறிவிருக்குன்னு பாருங்க. அதுலெ படிச்சவன் பலருக்கு கொஞ்சமானும் இல்லியேன்னு நெனச்சுப்பேன்.

எங்கே போனாலும் தொரத்துவானுங்க. மாட்டினவன் தொலஞ்சான்.

பத்திரிகையிலே இன்ஸூரென்ஸ் ஏஜண்டுகளைப் பத்தி எழுதாத ஜோக்குங்களா?

சுலபமா பணம் வருமின்னு பல நாட்லேருந்து நெரய பேரு இங்க கடை போட்டுடானுக. மாட்ரவன் கொரஞ்சுட்டான். அதுனாலே புதுசா மோசடீலே இறங்கிடானுக.

இன்ஸூரென்ஸ் பாலிசிக்கு கண்ணு மூக்கு எல்லாம் வச்சு, பெரிய புத்தகம் ஒண்ணு குடுத்து பக்கம் பக்கமா கையெளுத்து வாங்கிருவானுக. படிக்காம கையெளுத்து போட்டா, அவன் காலியாயிருவான்.

அப்பப்ப, சில ஆளுங்க தெரிஞ்சு இன்சூரென்ஸ் பாலிசி எதுக்காக எடுக்கறான்? ஒரு காலத்துலே கவர்மெண்ட்லே வருமான வரி சலுகை கொடுத்தாங்க. டாக்ஸ் கட்றத விட இத் சேவிங்ஸ் மாதிரி இருக்கும், லாபம் வரும்னு நம்பினாங்க. நாம செத்துட்டோன்னா, நம்மள நம்பியுள்ள பொண்டாட்டி புள்ளங்க கஷ்டப்படக்கூடாதுன்னு தான். மக்களோட சாவர பயம் ஒண்ண மாத்திரம் வைச்சி நடத்தர ஒரு கொள்ளை.

**கார் மற்றும் வாகனம் பாதுகாப்பு:**

வாகனத்தின் முழு விலையை ஆதாரமாக வைத்து பிரீமியம் அல்லது தவணையாக செலுத்த வேண்டிய தொகை நிர்ணயிக்கப்படும்.

நமது போதாத காலம் நம் வாகனம் விபத்தில் சிக்கினாலோ, கண்ணாடிக்கு பாதுகாப்பு கிடையாது, பிளாஸ்டிக் பாகங்களுக்கு பாதி இழப்பீடுதான் கிடைக்கும் என்று, புதிய விவரங்கள் தெரியவரும்.

வளந்த நாடுகள்ளே நாம் தப்பு செய்யாம வேறு ஒருவர் இடித்து நமது வாகனம் சேதமடைஞ்சுதுன்னா, தவறு செய்தவர் செஞ்ச இன்ஸ்யூன்ஸ் பணத்துலே நமது சரி செய்யப்படும். நம்ம ஊர் விவகாரமே தனி.

வருசம் ஏற ஏற, இன்ஸ்யூரென்ஸ் தவணையில் அதிக மாற்றம் வராது. ஆனால் சேதத்தை ஈடுகட்ட இன்ஸ்யூரென்ஸ் கம்பெனிகள் தரும் பணம் மாத்திரம் அதிவேகமாக குறைஞ்சுக்கிடே வரும்.

ஏனென்றால் உங்கள் வாகனம் தேய்ந்து மதிப்பை இழந்துவிட்டதாம்.

விபத்தில் சிக்கிய ஒரு புதியவாகனத்தை சரி செய்ய ரூ 50,000 செலவானால், ரூ 35000 இன்ஸ்யூரென்ஸ் தொகை கிடைக்குமானால் அதுவே ஒரு பெரிய வெற்றி. அதுக்கு கூட அசெஸ்மெண்டு பண்ர ஆளுக்கு காசு தறல்லேனா, அதுவும் கொரையும்.

கேசு எழுதுவாங்க. அது பூட்ட கேசுதான். எப்பவுமே வராது. செத்துரும் நஷ்ட ஈடு என்னெக்கிமே கெடக்காது.

சிறிய எழுத்தில் அறிவிப்புகள்.

Fine Print என்று ஒரு சமாசாரம். ஒரு ஏமாற்று வேலை. எந்த ஒரு அம்சம் எழுத்தில் இருந்து, நமது கண்களில் அகப்பட்டு அதனால் இன்ஸ்யூரென்ஸ் உள்பட எதையும் வாங்கத் தயக்கம் வருமோ, அவற்றை மிகச் சிறிய எழுத்தில் அச்சடித்திருக்கும்.

சில எச்சரிக்கை, சில அறிவிப்புகள் நமது கவனத்திற்கு வருமானால் நாம் அதை வாங்கவோ உபயோகிக்க மாட்டோம். ஆனால் எச்சரிக்கை இல்லேன்னா (வளர்ந்த நாடுகளில்) சட்டங்களின் அடிப்படையில் உற்பத்தியாளர்கள் தண்டிக்கபடலாம். ஆகவே இந்த சிறிய எழுத்துலே அறிவிப்பு தருவாங்க.

அது போலவே

அமெரிக்கா போன்றசில க்கவளர்ந்த நாடுகளில் சட்டங்கள

மீறுகிற தொழில் அதிபர்களுக்கு கடுமையான தண்டனை தருவாங்க. பொய்யான விளம்பரங்களால் மக்களை ஏமாற்ற முயற்சி பண்ரவங்கள கவனிக்க தீவிரமாக செயல்படும் இயக்கங்கள் இருக்கு.

வருடம் தவறாமல் நடுத்தர மக்களேட பணத்த ஏப்பம் விடர பிளேடு பைனான்ஸ் கம்பெனிகளின் போடர ஆட்டம், வெளி நாட்டுலே வேலைத் தரேன்னு மோச டிகளுக்கு, அங்கே அதிரடி தண்டனை தருவாங்க. நம்ம நாட்லே மக்களுக்கு விரோதமா குத்தம் பண்ணினா என்ன கெடைக்கும் நான் சொல்லித்தான் தெரியணுமா?

கூட்டுறவு என்கிறது ஒரு நல்ல எண்ணத்துலெ ஆரம்பிச்ச நல்ல இயக்கம். இதுலே நடக்குற மோசடி ஒண்ணு ரெண்டு இல்லே.

## இழந்த இளமை,
## மிஸ்டர் பாசுவின் இன்ஸ்யூரென்ஸ் கதை
## (ஒரு உண்மை நிகழ்ச்சி)

இன்ஷ்யூரன்ஸ்-ஐப் பற்றி நான் தெரிஞ்சுக்கிட்ட ஒரு உண்மை நிகழ்ச்சி. இது நடந்து சுமார் முப்பது வருசம் ஓடிருச்சு.

பாசு என்ற வங்காளி நண்பர். ஒரு சக தொழிலாளி. சிரிச்ச முகம். ரொம்ப ஜாலி டைப். ஒரு நாள் அடக்கமுடியாத சிரிப்புடன் அறைக்குள்ள் நுழைஞ்சாரு.

அண்ணன் ..... கெக் .. கெக் கெக் ..... அடக்க முடியாத சிரிப்பு. அத்துடன் ஏதோ அவசரமாக சொல்ல வருகிறார். கையில் கத்தையான காகிதங்கள்.

பாசு முதலில் சொல்ல வந்ததைச் சொல்லு பிறகு சிரி. முடியாவிட்டால் சிரித்து முடித்துவிட்டு வந்து செ ால்லிடுங்கரேன். உடனே வெளியே போயிட்டு, சிறிதுநேரம் வெளியே போயிட்டு அறைக்குத் திருப்பி வராரு.

அன்னிக்கு, ஓர் பிளாஷ் பேக் காண்பிச்சாரு.

சுமார் 35 வருடத்திற்கு முன்னால் (தான் கல்லூரியிலிருந்து வெளிவந்த புதுசுலே) ஒரு காலத்துக்கு கூட்டிட்டு போயிட்டாரு.

கொல்கத்தா। அங்கிருந்து சுமார் 100 மைல் தள்ளி ஒரு சிறிய கிராமம். அது தான் பாசு பிறந்த மண். பட்டப் படிப்பு முடிச்சுட்டு வேலைகளுக்கு விண்ணப்பித்து. இண்டவியூக்கள் பல கண்டு விட்டார், கடைசியாக, கொல்கத்தாவில் ஒரு மத்திய அரசைச் சார்ந்த ஒரு அமைப்பில், அவருக்கு ஒரு வேலை கிடைத்தது.

கிராமங்களில் ஒரு வழக்கம், கிராமத்தில் ஊர்ப் பெரியவர்கள் என்று (வேலைவெட்டி ஒன்றில்லாமல்) சிலர் இருப்பாங்க. கூடிப் பேசிக்கிட்டு, மத்தவங்களைக் கொற சொல்லிக்கிட்டு, வம்பு பேசிட்டு பொழுது போக்குவாங்க. இவங்கள கண்டா ஊர்லே எல்லொருக்கும் ஒருவிதமான பயம்.

நல்லதோ கெட்டதோ இவர்களிடம் முதலில் சொல்லிவிட வேண்டும். இல்லைனாக்க, அவதூறு பேசுவதும், இழிவதும் தவறாது. இதுனால ஊர்க்காரங்க அவங்க புள்ளே குட்டிங்க படிச்சு பாஸ் பண்ணினா, வேலெ கெடச்சாக்க ஊர் பெரியவர்கள் அரட்டை அடிக்குமிடத்திற்கு அனுப்பி வைப்பார்கள். சிறுவர்களும், பெற்றோர் சொல்லியது போல விசயத்த சொல்லி வணங்கி ஆசி வாங்குவாங்க.

பாசுவின் வீட்டிலும் அப்படியே சொன்னாங்க.

பாசு பெரியவர்களை வணங்கி தனது வேலைக்கான உத்திரவை ஒரு பெரியவரிடம் கொடுத்தார். அந்தப் பெரியவர், தன் வாழ்நாள்லே எந்த ஒரு வேலை வெட்டிக்கும் போனதாக யாருக்குமே தெரியாது.

இந்த வேலை மிக அருமையானது, விரைவில் பல பதவி உயர்வுகள் கிடைக்கும் என்று ரீல் மேக் ரீலாக அவிழ்த்து விட்டாராம்.

பெரிவங்க ஏதோ தனக்கு தெரிந்தது, தெரியாதது

எல்லாம் பரிமாரிக்கிட்டாங்க. கடேசியாக ஒரு வாய்ச் ச வடால் பேர்வழி (பாசுவின் வில்லன்) தன் பங்குக்குத் தொடங்கினார்.

பெரியவர்: பாசு, இப்போது உன் வயசென்ன?

பாசு : 22

பெரியவர்: இன்னும் 7 வருடத்தில் உனக்கு ஒரு கல்யாணம் நடக்கும்.

(பாசு தன் மனதுக்கு இனியவளுடன் திருமணம் நடப்பதாக கற்பனையில் மூழ்கினார்). பெரியவர், தொடர்ந்தார்.

அதன் பிறகு இரண்டே வருடங்களில் ஒரு அழகான ஒரு பெண் பிறப்பாள். (பாசு, மீண்டும் தன் கனவிலே கலந்தார்)

அடுத்த 20 வருடங்கள் கட கட வென்று ஓடிவிடும். பெண் திருமணத்திற்கு தயாராயிருப்பாள்.

கல்யாணமுன்னாக்க சும்மாவா? ரூபாய் 5000 வரை தேவைப்படும். எனவே முதல் சம்பளம் கிடைத்தவுடன் ரூபாய் 5000 க்கு ஒரு இன்ஸ்யூரன்ஸ் பாலிசி எடுத்துக்கன்னு அறிவுருத்துராறு.

கனவில் மிரட்டிய ரூபாய் ஐயாயிரம்:

புதிய வேலை, கை பிடிக்க ஆசைபட்ட கனவுக் கன்னியைப் பற்றிய நினைவு என்று எதுவுமே இப்போது மகிழ்ச்சியைத் தருவதில்லை.

பெரியவர்கள் பயமுறுத்திய ரூபாய் 5000, அதாவது, பத்து வருடம் கழித்துப் பிறக்கப் போகும் பெண்ணிற்கு, பிறந்த பிறகு சுமார் இருபது வருடம் கழிந்து நடக்கவி ருக்கும் கல்யாணத்திற்குத் தேவைப்படும் ரூபாய் 5000, அவருடைய் கனவில் கூட வந்து மிரட்டியது.

வேலைக்குச் சேர்ந்தவுடன் முதல் வேலையாக ரூபாய் ஐயாயிரத்திற்கு இன்ஷ்யூரன்ஸ் பாலிசி எடுத்தார். கிடைத்த சம்பளமோ ரூபாய் 75. இதில் ரூபாய் 40 - 45

இன்ச்யூரன்ஸ் பிரீமியமாக போய்விடும்.

வேலை இருந்தும், காசில்லாத இல்லாத ஒரு அவல நிலை. இது மாற சுமார் 8 வருடங்கள் கழிந்தன.

ஒரு பதவி உயர்வு, சம்பள உயர்வு, விலைவாசிப் படி அதிகரிப்பு எல்லாமா சேந்து பிரீமியம் மீதான பளு ஏகமாக இறங்கிடுச்சு. பாசு தன் கதையை நிருத்திவிட்டு மீண்டும் பலமாகச் சிரிச்சாரு.

இன்னும் 3 மாதத்துலே என் பெண்ணுக்கு திருமணம். என்றார்.

பதிலுக்கு நான், அது தெரிஞ்சது தானேன்னேன்.

பாசுவுக்கு இன்ஸ்யூரன்ஸ் கம்பெனியிலிருந்து செக் ஒன்று வந்திருக்குதாம். சொல்லிட்டு. திரும்பவும் பலமாகச் சிரிக்கிறார்.

கிட்டத்தட்ட ரூபாய் 8 ஆயிரம் அளவில் இன்ஷ்யூரென்ஸ் கம்பெனி அனுப்பியிருக்கிறது. இதில் முகூர்த்தப் புடவை கூட வாங்க முடியாது. இது எனது, இன்றைய, இரண்டு மாத சம்பளம் தான்.

படுபாவி ஊர்ப் பெரியவனுக, பயமுறுத்தியே என் இளமையில் கிடைத்த நல்ல வருமானத்தை அனுபவிக்கவிடாமல் இன்ஷ்யூரென்சுலே பணத்தைக் கொட்ட வைத்தார்கள்.

இந்த 8000 ரூபாய்க்காக என் இளம் வயதுக் கனவுகளை முற்றிலும் அழிச்சுட்டாங்க. பணமிருந்தும் ஏழையாக பல வருடம் வாழ்ந்தேன்னு முடிச்சாரு.

இந்த இன்ஷ்யூரென்ஸ் தொகையை வைத்து பெண் கல் யாணம் நடத்தலாமுன்னானுங்களே. அப்ப பணமும் தெரியாது பண வீக்கமும் தெரியாது. அது வீங்கின வீக்கத்துலே கல்யாணம் நடத்த தேவையான பணம் முகூர்த்தப் புடவை வாங்கக் கூட பற்றல்லே என்னு செ ால்லிப் புட்டு திரும்பவும் சிரிக்கராரு.

இதிலொரு முக்கிய பாடமொன்று இருக்கிறது.

மக்கேள கவனியுங்கள்.

இன்று வங்கியிலோ இன்ஷூரென்ஸ் ஆகியவற்றிலோ முதலீடு செய்த பணம், நாள் செல்லச் செல்ல அதன் மதிப்பு குறைஞ்சுக்கிட்டே வருது. நாம் குறைந்த வயதில் விபத்திலோ அல்லது வியாதியிலோ இறந்தாக்க நம்ம நம்பி இருக்கறவங்களுக்கு உதவும். நாளாக நாளாக கெடைக்குர பணத்தோட மதிப்பும் கொறஞ்சுக்கிட்டே வரும்.

இத பண முதலீடுன்னு பாத்தாக்க. நம்ம பணம் பட்டை நாமம்தான். எத்தனையோ பேரு பாதியிலே மாசாந்திர பணம் கட்டாமல் விட்டுருவாங்க. இந்த் துட்ட அப்படியே இன்சூரென்ஸ் கம்பெனி முழுங்கிரும். அவங்க லாபத்தோட சேந்துருமாங்க. அதான், போட்டி போட்டுக்கிட்டு வெளி நாட்டுக்கரன் படையெடுக்கரான்.

இப்பெல்லாம் களவானிப் பயலுக இன்சுரென்சுன்னு செ ால்லாம எதோதோ புதுசா பேரு வச்சு, இது இன்சுரென்ஸ் இல்லேன்னு விக்குறானுக. சாரக்கூட ரொம்பநாளைக்கு பழகின ஒரு ஏஜெண்டு ஏமாத்திட்டாங்கனன்னு செ ான்னாரு. ஆனைக்கும் அடிசருக்கும் இல்லையா.

இன்ஷூரென்ஸ் திட்டங்களை, சேமிப்பு என்று நினைத்து அருகில் செல்வது அறிவின் குறைவு.

அமெரிக்காவுலேந்து தருவிச்ச பெரிய ஏமாத்துர வித்தே, சிற்ய எழுத்துலே கண்ணுலே படாமே முக்கியமான, நம்மள கவுக்குர விசயங்கள போட்ருவானுக.

இப்பெல்லாம் சாரு யார் பேச்சயும் நம்பரதில்லே. ஒரு தட பட்டாச்சுல்லே. நல்ல மாட்டுக்கு ஒரு சூடும்பாங்க.

எதா இருந்தாலும் அவசரப்பட்டு கையெழுத்து போட்டாக நாம மொட்டையாயிருவோம். எதையும் சுத்த்மா படிச்சு புரிஞ்சுக்கிட்டப்புரம் தான் கையெழுத்து போடனும்.

இன்ஸ்யூரன்ஸ் ஏஜெண்டுகளுக்குப் பலமான கமிஷன் தொகைய அள்ளித் தராங்கல்ல. பல பொய்களை வுத்து விடுராங்க.

சமீபத்துலே ஆங்கில பொருளாதார தொலைக்காட்சி சானல்களில் இது போன்ற குற்றங்கள மக்கள் கொண்டு வாராங்க. எச்சரிக்கராங்க. மக்களே, உஷார்.

## உற்ற நண்பர்கள்

நம்ம ஏழையாக்கறதுலே, நண்பர்கள்ளுன்னு ஒரு கூட்டம் தீவிரமா இருக்கும். இப்பெல்லாம், நல்லவன்னா, ஏமாளின்னு சொல்றாங்க.

குழந்தப் பருவத்துலேந்து தொடங்கி, பள்ளி மற்றும் கல்லூரிகள்ளே தொடந்து, வாழ்க்கேல பூருதுங்க ஒரு வியாதி. அது நம்மள நாசமாக்கர வரைக்கும் நம்ம பின்னாடி வரும்.

சமுதாயத்துலே, அலுவலகத்திலே ஒருவருக்கு ஒருவர், நல்லது கெட்டதுன்னா ஒரு ஒதவி செஞ்சுப்பாங்க, இனிமையாகப் பழகுவாங்க. இதுக்கெல்லாமே ஒரு எல்லைக் கோடு ஒண்ணு போட்றணும். எல்லையத் தாண்டினா, பிரச்சனைதான். ராமாயணத்துலே லச்சுமண ரேகைங்கராங்களே. அப்படி. தாண்டினாக்க கதை கந்தலாயிரும்.

## நண்பர்கள், நம்மை, ஏன் மோசடி செய்யணும்?

மக்களை ஏழ்மையில் தள்ள உறவுக்கு மேல சிறப்பா வேறு ஒரு உறவையும் சொல்ல முடியாது,

பல வருடங்களா வளந்துக்கிட்ட நட்பு, வெகு வேகமா மறையணுமா. அவங்களே செய்யற தொழில்லே ஒரு கூட்டாளியாச் சேருங்க. போதும். அதில்லே. அந்த நண்பரோட அவசரத்திற்கு தேவைப் படும் போது ஒரு பெரிய தொகைய கொடுத்து உதவி பண்ணுங்க.

நட்பின் பெயரால மாதந்திர ஏலச் சீட்டு ஒன்றிற்கு செக்யூரிட்டீயாக நின்னுட்டு நான் உறக்கமே இல்லாத நாட்களை இன்னிக்கும் மறக்கல்லே. அப்புரந்தான் ஒவ்வொருத்தன்னா அவனவன் கதைய சொல்றான். ஏண்டா என்ன எச்சரிக்க பண்ணல்லேன்னாக்க, இது சொல்லி கேக்குற விவகாரமில்லே, அடிவாங்கி புரிஞ்சு

க்கணுமுறாங்க. கரெக்டுதான். நட்பு இருக்குல்லே, அது யாராச்சும் சொன்னாக்கூட நம்மள நம்ப வைக்காது.

இது என் சொந்த அனுபவம் மாத்திரம் இல்லைய்யா. கண்டு, கேட்டு படித்த சம்பவங்கள் கணக்கில் அடங்காது.

**ஒரு நண்பரின் அதிரடி லாஜிக்.**

மோசம் செஞ்சுப்புட்டு நண்பர் ஒருவர் தன் செயலுக்குக் கீழ் வருமாறு விளக்கம் கொடுத்தாராம்.

நாம் பழகுர எல்லாருமே நம்மள நண்பரா ஏத்துக்க மாட்டாங்க. ஒவ்வொருத்தனும் நம்மள ஆழம்பாப்பாங்க.

பேசரத கவனிப்பாங்க. ஒத்தரு ரண்டு பேரு மாத்தரம் ஏதும் பாக்காம, நண்பரா ஏத்துப்பாங்க. நாம என்ன செ ான்னாலும் அப்புடியே ஏத்துப்பாங்க, நம்புவாங்க.

அதுனால, நம்மள நம்பாதவங்கள மோசம் பண்ண முடியாது. அதனால நம்பரவனத்தானே செய்ய முடியும்.

நம்பிக்கை துரோகம் செய்யருத்த்துக்கும் ஒரு லாஜிக் பாத்தீங்களா. உண்மையும் இதுதான். நாம் நல்லவர்கள், நம்பிக்கைக்கு பாத்திரமானவர்கள் என்று நாம் சிலரை நம்ப, அவர்கள் நம்மை ஒரு ஏமாளியாப் பாக்கராங்க. மொத்ததுலெ தப்பு ஏமார்ரவன் மேலேதான்.

எனவே, நண்பர்லளை நடு வீடுவரை கொண்டு வந்து பொருளாதாரத் தொடர்புகள் செய்து கொள்வது, நாம் அதிவேகமாக ஏழையாவதற்கு, ஒரு குறுக்கு வழி.

## நட்பின் இலக்கணம்:

**(1)உண்மையான நண்பர்கள் எவருமே, தாங்கள் செய்த உதவிக்கு, பதில் உதவி எதிர்பார்ப்பதில்லை என்று யாரோ எப்போதோ விட்ட ஒரு ரீல்.**

**(2) காதலுங்கருதும் ஒருவித நட்புதானே. ஆனாக்க கலியாணம்னு ஒண்ணு ஆனப்புரம், எத்தன புருசன் பொஞ்சாதி அடிச்சுக்கிட்டு நிக்கராங்க?**

உலகம் தோன்றிய நாள்ளேந்து அப்படிப்பட்ட ஒரு நண்பனைத் தேடி பலர் அலைஞ்சுக்கிட்டு இருக்கானுக,

யாருக்குமே அப்புடி ஒரு நண்பர் கிடைச்சாருன்னு தகவல் இல்லே. அப்படி தேடருதும் நிக்கல்லைய்யா.

இதைப் படிக்கும் வாசகர்கள் யாராவது: இப்படிப்பட்ட நல்ல மனசுள்ள நண்பர் யாராச்சும் உங்களுக்கு இருந்தாங்கன்னா, ஒரே ஒருவரை மாத்திரம் எனக்கு பாக்கணும்.

நீங்கள் எத்தனை பேருக்கு இப்படிப்பட்ட இலக்கணம் கொண்ட ஒரு நண்பர்...? அதையும் சொல்லுங்க.

உலகம் தோன்றிய நாளிலிருந்து எல்லோருமே இப்படிப்பட்ட ஒரு கேரட்டரைத்தான் தேடிகிட்டுருக்காங்க.

யாருக்குமே, அப்படிப்பட்ட நபர் கிடைக்கல்லியாம்.

**பெற்றோர்களை ஏழையாக்கும் பிள்ளைகள் !**

கருப்புசாமி ஒரு விவசாயி. கிருட்டினமூர்த்தி ஒரு ஆரம்பக்கல்வி ஆசிரியர், காதர்பாய், மானில அரசில் கடைநிலை ஊழியர். தேவசகாயம் ஒரு எலக்ட்ரீசியன், பீட்டர் ஒரு சைக்கிள் ரிக்ஷா ஓட்டிப் பிழைக்கிறார். இவர்கள் எல்லொருக்கும் ஒரு ஒற்றுமை.

இவர்கள் எல்லோரையும் ஏழ்மையான வாழ்க்கை முழுவதும் துரத்தியது. கல்விதான் பொருளாதார முன்னேற்றத்திற்கு வழி செய்யும் என்று கல்வியாளர்கள், தலைவர்கள், என்று படித்தவர் பலர் சொல்லுதை இவர்கள் எல்லோருமே நம்பினார்கள்.

நம் வாழ்க்கை இருட்டாக ஆரம்பித்து, இருட்டிலே நகர்கின்றது. பிள்ளை குட்டிகளாவது நலமாக வாழட்டும் என்று தீர்மானித்தார்கள்.

வயிற்றைக் கட்டி, வாயைக் கட்டி பிள்ளைகளுக்கு யூனிபாரம் - ஷு போடும் இங்கிலீசு பள்ளிக் கூடத்திற்கு அனுப்பிச்சாங்க.

எதையெல்லம், அடகு வச்சாக்க பணம் கிடைக்குமோ அதையெல்லாம் அடகு வச்சு பணம் சேர்த்தாங்க.

பிள்ளங்களே மருத்துவம் பொரியியல் என்று பெரிய படிப்பிற்கு கல்லூரிக்கு அனுப்பி பெரும் ச்சாங்க.

**பொருபற்ற பிள்ளைகள்:**

பல புள்ளங்களுக்கு பெத்தவங்க பண்ற தியாகமும், பிள்ளைங்க நல்லாயிருக்கணும் என்று காணும் பல கனவுகளும் புரியரதில்லே.

படிக்கறதுலே முழு கவனமும் வச்சு உழச்சாத்தான் காசு வர்ர நல்ல உத்தியோகம் கெடைக்கும்.

இந்த கால கட்டதுலே கவனமா இருக்கணும். மனசு வேற தெசையிலே போயிரக்கூடாது. பணக்காரப் பயலுகள் பின்னாடி சுத்தரது. வெளயாட்டு, காதல் கருமாந்தரம்னு சுத்தரது.

படிப்ப முடிச்சு வேல கெடச்சப்ப காதல் பண்ணு யாரு வேணாங்கராங்க.

இளசுங்க கனவுல பெற்றோர்கள் வர்ரதில்லை. ஏழ்மையின் கொடூரமான முகங்கள் தெரியரதில்லை. கடந்த காலம் எதிர்காலம் எதுவுமே இல்லை.

மனுசன் வாழ்க்கைலே, மாயை தன் சேட்டையை காண்பிக்கிர முக்கிய பருவம், மாணபப் பருவம்.

மோசமான இரண்டே இரண்டு பொய்களை தலையில் திணிக்கிறது,

முதலாவது நட்பு. இரண்டாவது காதல்.

இப்போ கதைக்கு வருவோம்.

மேலே சொன்ன ஏழைங்களோட (கருப்புசாமி கிருட்டினமூர்த்தி காதர்பாய், தேவசகாயம் ஒரு எலக்ட்ரீசியன், பீட்டர்) பிள்ளைச் செல்வங்க கல்லூரிலே என்னென்ன் தன் வசதியான நண்பன் பைக்கைக் கடன் வாங்கி, மாணவிகள் முன்னால் எட்டுபோட்டு, பஸ் புட்போர்டில் தொாங்கி, காணும் பெண்களை காதல் வலையில் சிக்க வைக்க முயற்சியில் ஈடுபட்டார்கள்.

கிளாசைக் கட்டடித்து நண்பர்களுடன் சினிமா பார்த்தார்கள் சினிமா நடிகர்கள் கட்டவுட்டிற்கு பால் அபிஷேகம் செய்து மகிழ்ந்தார்கள்.

வேறு சிலரோ, அலங்காரத்திற்கு பட்டம் வாங்க வந்த பணக்கார பிள்ளைகளுடன் கூட்டணி அமைத்து பார்களில் குடித்துக் கும்மாளமிட்டார்கள்.

நான்கு ஆண்டுகள் கழித்து கல்லூரிகளைவிட்டு வெளியேறும் போது கையில் ஒரு பறக்காத பட்டம், அதில் எழுதியிருந்த மிகக் குறைந்த மதிப்பெண்களைப் பார்த்து காதலிகள் காணாமல் போனார்கள்.

பாடங்களிலிருந்து கேட்ட கேள்விகளுக்குத் தெரியாத பதில்களோடு கல்லூரியிலிருந்து வெளியேறிய இந்த புத்திர செல்வங்கக்கு வேலை கொடுப்பவர் யாரும் இல்லை.

இவர்கள் பிற்காலம்தான் என்ன?

கல்லூரி முடித்து, கை நிறைய சம்பளம் வாங்கி, வைத்த அடகை மீட்கத் திட்டமிட்ட பெற்றோர் எண்ணத்தில் மண் விழுகிறது.

அடுத்து வரும் வருடங்களில் வெளியூர்களில் தங்கி வேலை தேடிவர அப்பாவி ஏழைப் பெற்றொர் தொடந்து செலவு செய்ய வேண்டும். இந்த ஏழைகளை நம்பி எத்தனை நிறுவனங்கள் பயிற்சி தரக் காத்திருக்கு? புதிய நிறுவனங்கள் முளைத்துக் கொண்டிருக்கின்றன.?

இவர்களை, மக்கட் செல்வம் என்றா சொல்வது? இப் படிப் பட்ட பிள்ளைகள் நம் முந்தய பிறவிகளில் பட்ட கந்துவட்டியிலே இல்லை மீட்டர் வட்டியிலே கடன்களை திருப்பத் தவறியதால். அதை வசூலிக்க. பின் தொடரும் அடியாட்களாக இருக்குமோ?

அதுவும் இல்லையினா, அரசாங்க வேலையில் வயிரை வளர்த்து, வேலை எதுவும் செய்யாமல், லஞ்சம் வாங்கினாலே வந்த ஊழ் வினையாக இருக்குமோ?

**நான்காம் வகை -செல்வத்தை ஒதுக்கியே வாழ்பவர்.**

இவர்கள் விசித்திரமான மக்கள். இவர்கள் இருக்கும் செல்வத்தையும் துறந்து, இயற்கையின் மடியில் தஞ்சம் புகுவார்கள். இயற்கையின் சீற்றங்களை எதிர்கொண்டு, இனிதாக வாழ்கிறார்கள்.

இந்த மக்களை மகான் என்கிறோம். ஏன்? இவர்களைச் சரணடைய எத்தனை மக்கள் காத்திருக்கிறார்கள்? இவர்களின் கடைக் கண் பார்வைக்கு ஏங்கும் செல்ந்தர்கள் தான் எத்தனை?

இந்த மனிதர்கள் மகான்களாக என்ன செய்தார்கள்?

அறிவு பூரணமாக இரண்டு உண்மைகளை உணர்ந்தார்கள்.

(1) செல்வங்கள் மனிதனுக்கு சுகமில்லை. ஒரு சுமை தான்.

(2) செல்வம் மற்றும், உணர்வுகளால் அறியும் உலக அனுபவங்கள், மனிதனை தன் பக்கம் இழுத்து, பிறவி எனும் மீளாப் பெரும் கடலில் மூழ்கடிக்கிறது.

இவர்களால் செல்வம் எதுவும் இல்லாமல் எப்படி வாழ முடிகிறது?

இவர்கள் ஆண்டவனைக் காண ஆசைப்பட்டோரும், அண்டத்தை அறிந்திட ஆசைப்பட்டோரும், நான் யார்? கடவுளுக்கும் எனக்கும் உள்ள தொடர்பு என்ன என்று தேடும்போது, இவர்களுக்கு கிடைத்தது என்னவோ அறிவு! அறிவும் ஒரு சக்தி அல்லது பெரும் செல்வம். செல்வத்தை அருட் செல்வம் என்றும் பொருட் செல்வம் என்றும் பிரிக்கலாம். அறிவை அருட் செல்வம் என்று நினைப்பது உயர்வு.

பொருட் செல்வம் உலகத்தில் உள்ள பொருட்களை மற்றும் இன்பங்களை அடை ந்து மகிழலாம். ஆனால் அருட் செல்வமானது, பொருள் மற்றும் பொருளுடன் தொடரும் துன்பங்கள் இல்லாமலேயே மகிழ்வுடன் வாழ்ந்திருக்க வகை செய்கிறதுது.

நமக்கு அறிவு இருக்கிறதா இல்லையா என்று எப்படித் தெரிஞ்சுக்கிடறது? சும்மா பாடமா சொல்றதவிட ஒரு கதையில படிச்சு தெரிஞ்க் கிடுவோம்.

**ஒரு கதை: ஹைதராபாதில் மாணிக்கம்**

கரிவேலங்குடின்னு ஒரு கிராமம். அங்கேத்தில் மாணிக் கம் என்கிற சின்ன வயசுக்காரன் இருக்கான். கல்லூரிப் ப டிப்பை முடிச்சுட்டு வேலை தேடுரானாம். வருசன்தான் ஓடிப்போச்சு. வேலை வெட்டி ஒண்ணும் செய்யறதில்லே. கல்யாணம் பண்ணி பிள்ளளை குட்டிள்னு என்று பெத்துட்டான். பொருப்பான பயக மாதிரி வேலை பாத்தோமா, குடும்பத்த பாத்திக்கிட்டோமான்னு இல்லே. அவன் அப்பன் செலவுலே நாளை ஓட்டுரான்.

அதே ஊருலே, அதிகமா படிக்காம, என்ன மாதிரி ஒரு ஆளு ராமைய்யன்னு பேரு. ராணுவத்துலே வேலைக்கு சேந்து, ரிட்டையராகி, விவசாயம் பாத்திட்டுருக்கிறாரு.

மாணிக்கத்துக்கு புத்தி சொல்வாரு. தம்பி, தமிழகத்தின் எல்லையைத் தாண்டி, மற்ற மானிலத்துலே வேலை தே டும்படி அறிவுருத்தினாரு.

மாணிக்கத்திற்கு ஊரைவிட்டு அதிலும் மாநிலத்தை விட் டு போறதுக்கு பயம். அதனால, ராமைய்யனையும் அ வருடைய குறைச்ச படிப்பு. எல்லாத்தையும் மத்தவங்க முன்னாடி கேலி பேசுவான்.

ஒரு நாளைக்கி ராமய்யனுக்கு கோவம் வந்துடிச்சு. மாணிக் கத்திற்கு ஒரு பாடம் கற்பிக்கிறேன்னு எறங்கினாரு.

விரும்பினார். எனவே, கிராம மக்கள் மத்தியில் மாணிக்கத் திற்கு ஒரு சவால் விட்டார்.

ஹைதராபாத் வரை போயிட்டு திரும்பி வர்த்துக்கு ரயில் டிக்கெட் எடுத்துத் தரேன். செலவுக்குத் தேவையான ப ணம் தாரேன். மானிக்கம் ஹைதராபாத் போயி அங்குள்ள குதூப் மினாரைக் கண்டுபிடிச்சு, செல்போன்ல புகைப்ப

டம் எடுத்து வரவேண்டும் என்பது அந்த சவால்.

வேறு வழி தெரியாமல் மாணிக்கமும் ஹைதராபாதை அடைந்து, அங்குள்ள ஒரு சைக்கிள் ரிக்ஷா ஓட்டுபவரை, தன்னை குதுாப் மினார் வரை கொண்டு செல்ல வேண்டு மென்றார்.

ரிக்க்ஷா ஓட்டுனர் அதிர்ந்து போனார். அருகிலிருந்த ஒரு தமிழரை அடையாளம் கண்டு, அவர் உதவியுடன் கீழே கண்டவாறு மாணிக்கத்துடன் பேசினார்.

ரிக்ஷா ஓட்டி: குதுாப்மினார் இங்கே இல்லே. அது தில்லி லே இருக்கு.

மாணிக்கம்: எனது ஊர்க்காரர் சொன்னது தப்பாக இருக் காது. அவர் இந்தியா முழுக்க வேலை பார்த்திருக்காரு..

ரிக்க்ஷா ஓட்டி: உன் பேச்சைக் கேட்டால், நீ ஒரு படிக்காத பட்டிக்காட்டு ஆசாமிபோல பேல பேசுரே.

மாணிக்கம்: கேட்ட துக்கு மேல போட்டுத் தாறேன். என்னை குதுாப் மினார் கொண்டு போங்க!

(இவர்கள் உதவிக்கு வந்த தமிழ் அன்பர் விளக்கியும் மா ணிக்கம் கேட்பதாக இல்லை).

ரிக்க்ஷா ஓட்டி, சரி உன்னை ஒரு கேள்வி கேட்பேன். ச ரியாக பதில் சொன்னால், குதுாப் மினாருக்கு கொண்டு போரேன். கரக்டா சொல்லாட்டா, சத்தம் போடாமல் ஊர் திரும்ப வேண்டும்.

மாணிக்கம்: சரி. எனக்கு சம்மதங்கராரு.

ரிக்க்ஷா ஓட்டி: என் வீட்டில் மொத்தம் நான்கு பேர் இ ருக்கிறோம். என் மனைவி, மற்ற இருவரும் என் மகன்கள். நாலாவது ஆளு யாரு ?

மாணிக்கம்: என்னை உன் வீட்டுக்கு அழைச்சு ட்டுப் போனா, பார்த்துச் சொல்றேன்ங்கிறார்.
ரிக்க்ஷா ஓட்டி: உனக்கு சிந்திக்கிற சக்தி ரோம்பக் கொறைவு. அதனால ஒனக்கு அறிவில்லைங்கறாரு.

அந்த நாலாவது ஆளு நான்தான். வேறு யாரா இருக்க முடி யும்?

தமிழன்பர் ரிக்ஷா ஓட்டியோட சேந்து சிரிக்கிறாரு. அங்கே சுத்தி நின்னவங்களும் சேந்து கேலி பண்ணறாங்க.வேற வழி தெரியல்லே. தோல்வி அடைசுட்டோமுன்னு, மா ணிக்கம், உடனடியாக ஊர் திரும்புகிறாரு.

வீட்டுக்கு போற வழிலே ராமைய்யனைப் பாக்குறாரு. ஹைதராபாத் ரிக்ஷாக்காரர் கேட்ட அதே கேள்வியை ரா மைய்யனைக் கேக்குறாரு. அவருக்கு அறிவுண்டான்னு தெரிஞ்சுக்கத் தான்.

என் வீட்டில் மொத்தம் நான்கு பேர் இருக்கிறோம்.ஒண்ணு என் மனைவி, ரெண்டு பேரு, என் புள்ளெங்க. நாலாவது ஆளு யாரு ?

ராமைய்யன் பதில் சொல்கிறர். இதிலென்ன சன்தேகம். நீ யேதான் என்கிறார்.

மாணிக்கம் பலமாக சிரித்து. ஐய்யே, உன்க்கு இது கூட தெரியலையே! நான்காவது ஆளு ஹைதராபாத் சைக்கிள் ரிக்ஷா ஓட்டி, என்கிறார்.

இந்தக் கதையில் அறிவு சம்பந்தமான பல சிறு செய்திகள், கணிக்கப்பட வேண்டியவை, மற்றும் கவனிக்க வேண்டி தும் உள்னன.

முறையான கல்வி பெற்ற மாணிக்கம் எங்கெல்லாம் தவறு செய்கிறார். மாணிக்கத்தின் குறைகள் என்னென்ன? ரா மைய்யன் கற்றது எப்படி, கற்றதன் பயன் அடைந்ததும் என்னென்ன?

## அத்தியாயம் 07

# கடவுளும் ஏழைகளும்

சில நாட்கள் கந்தசாமி அண்ணன் கண்ணுலே படல்லே. என்ன கந்தசாமி, ஆளு கண்லேயே படல்லியேங்கறேன். 'ஒண்ணுமில்லே, சொந்ததிலே ஒரு இழவு விழுந்திருச்சு. போயி ஏதானும் ஒத்தாச பண்ணலாமுன்னு போனேனா. ஏண்டா போனமுன்னு ஆச்சு. போகட்டம் விடுங்க. கருமாதி காரியமெல்லாம் முடிஞ்சு இன்னிக்குத்தான் திரும்பினேன்" என்கிறார்.

இன்னிக்கி எதப்பத்தி பேசப் போறோம் என்று கேட்டேன். ஏழையப் பத்தி பேச கொஞ்ச - நஞ்சமாவா இருக்கு?

**இப்ப கந்தசாமி அண்ணன் சொல்றத கேப்போம்.**

### கடவுளும் ஏழைகளும்.

கடவுள்னு ஒண்ணு இருக்குது. அது இல்லாமே உலகம் அழிஞ்சுடும்னு பெரிய மனுசங்க பேசரது தப்புன்னு ஒரு சமயம் தோணுது, ஏன்னாக்க அந்தப் பேச்சு உண்மையிலே கடவுளுக்கு இல்லை. ஏழைங்களுக்குத்தான் பொருத்தமா இருக்குது.

ஏழைங்க இல்லாம ஒரு சமுதாயம் நிலைத்து நிக்க முடியாது. ஒரு நாடுன்னு எடுத்துகிட்டா எத்தன ஆபத்தான வேலயெல்லாம் இருக்கு. அதெல்லாம் எம் எல் ஏ மகனும், மந்திரி மகனுமா செய்வாங்களா? உயரத்துலே ஏறி பல மாடிவைச்ச கட்டடம் கட்டுகிற வேலை ஏழைங்களோடது.

விவசாயியப் பாருங்க. அதுவும் சின்னதா நிலபுலன் வச்சிருக்கிறவன். மழை தப்புச்சுன்னா பயிரு போயிரும், சில நேரத்துல பயிரு ரெடியா இருக்கும் அப்ப காத்து மழை வந்திருச்சுன்னா போட்ட விதை, எருவு, பூச்சி மருந்து, உழைப்பு, கொடுத்த கூலி எல்லாம் ஒரேடியா போயிடும்.

கந்து வட்டிக்கி கடன் வாங்கி வெளச்சல் கோளாரு வந்திச்சுன்னா என்னாகும்? தற்கொலதான்.

விவசாயிக்கி விவசாயம் தவிர வேற ஓண்ணும் தெரியாது. நம்ம நாட்டுலே விவசாயிங்க லட்சக் கணக்கில்ல தற்கொலை செய்துக்கிட்டிருக்காங்க.

அதிகமா, நல்ல விளச்சல் வந்தாக்க விவசாயிக்கு லாபமா? அதுவும் இல்லை. வாங்க ஆளு இருக்கமாட்டானுக. வியாபாரிகள் அடிமாட்டு விலைக்கு கேட்பார்கள். வேற வழி தெரியாமல் விக்கணும். அதை வாங்கி குளுர் சாதனுத்துலே பாதுகாத்து மெதுவா விக்கராங்களே வியாபாரிங்க, கால் மேல கால் போட்டுகிட்டு லாபம் பாத்திடலாம்.

பாதாள சாக்கட சுத்தம் பண்ணனுமா? ஏழைங்க வேணும். சுடுகாட்டுலே வெட்டியன் வேலைக்கு ஏழைதான் வந்தாகணும்.

அரசியல் கூட்டத்துலே உக்காந்து கை தட்ட ஆள் வேணும்னா, கூப்பிடுங்கய்யா. பட்டினிப் பட்டாளம் தயாரா எப்பவுமே இருக்கு. ஊர்வலம் போக, எதிர்கட்சிக்காரன் கூட்டத்துலே கல்லு எறியவும் அதே ஏழைங்கதான்.

ஒரு சினிமாலே அழகா காட்டுரானுக. பளிச்சுனு ஒரு டயலாக் சொல்லுவாங்க, 'அடிகிறவனும் ஏழைங்க அடி வாங்கரவனும் ஏழைங்க". (இரண்டு அரசியல் கட்சிக்கும் ஒரே ஆளுதான், காண்ட்ராட்லே ஆளு சப்ளை பண்ணுராரு). மனசு ஒரேடிய கனத்துது. ஏன்ன செய்ய?

போராட்டங்களா? ரத்தம் சிந்தணுமா, உயிர்த் தியாகமா எல்லாமே ஏழைக்குத்தான்.

பொணக்கிடங்குலே வேலைக்கும் ஏழைதான். மகா மோசமான பொதுக்கழிவிடத்திலே, டேபிள் போட்டு உட்கார்ந்து காசு வாங்கரவனும் ஏழைதான்.

பணக்காரன் ஏழையின்னு விதியாசம் இல்லாமே யாரு வீட்லே கல்யாணம் என்றாலும் கருமாதின்னாலும் பந்தல் போடரவனும் ஏழை, சமையல் பண்றவன், பரிமாறுகிறவன் எல்லோருமே ஏழைங்கதான்.

இப்ப சொல்லுங்க, இல்லாத இடமே இல்லைங்கரது கடவுளா? ஏழைங்களா?

அவன் இல்லாம எதுவுமே அசையாதுங்கரது கடவுளா ? ஏழைங்களா?

அதை விட மோசமா ஒண்ணு சொல்றானுக.

ஏழெங்க சிரிப்புலே கடவுளைப் பாக்கறேன்னு. ஏங்க, தெரியாம கேக்குறேன், ஏழை சந்தோசமா சிரிக்க என்னங்க இருக்கு. விரக்திலே சிரிச்சான்னா, அதுலே கடவுளு வந்து உக்காந்திருமா? கடவுளு என்னா, மனுசன் மாதிரி பொரத்தியான் துக்கத்திலே சந்தோசப் படரமாதிரில்லே பேசராங்க.

இல்லேன்னா, இப்படி இருக்கலாமோ? ஏழை சிரிக்க வாய்ப்பில்லே. அது மாதிரி நாம கடவுள பாக்க வாய்ப்பு இல்லேன்னு மறைமுகமா சொல்றானுகளா?

அத்தியாயம் 08

# ஏழை இல்லாத ஒரு உலகம் ஏழைங்க இல்லயின்னா இந்த உலகம் நின்னு போயிரும்

## (1) ஏழைகளும் அரசியலும்

அரசியலுக்கு ஏழைங்க கடவுளைப் போலத்தான். ஏழைகள் இல்லாம அரசியல் கட்சிங்க எல்லாமே (முக்கியமாக நம்ம நாட்டுலே) அழிஞ்சே போயிடும்.

அரசியல் கூட்டம் கூடும்போது, சாப்ட்வேர் எஞ்சினீரு, பாங்க் ஆபீசரு, பிளேன் பைலட்டுங்களா வராங்க. அடுத்த வேளக்கி சோறில்ல. ஏதோ ஒருவேளை சாப்பாடு தராங்க, தண்ணியடிக்க காசு வேற கிடைக்குதுன்னு ஏழைகள்தான் வராங்க, இல்லையா?.

போராட்டங்கள், கண்டன ஊர்வலங்கள் எல்லாத்துக்கும் ஆயிரக்கணக்கில் ஆள் வேணும்னா, ஏழைகள் தயாரா இருக்காங்க.

தலைவர்கள் கண்டு பிடிச்ச, புரியாத பல கொள்கைங்களே காப்பாத்த அப்பபோ தீக்குளிக்கவும், துப்பாக்கி சூட்டுலே சாக தொண்டர்கள் தேவைப் படுதில்லே என்னசெய்ய?

இதற்கெல்லாம் ஆளுங்க அம்பானி குடும்பத்திலேருந்தோ இல்லே மந்திரி, எம் எல் ஏ வீட்லேந்தா சப்ளையாகும்?

ஏழைங்களுக்கு, கட்சிங்க நடத்தர போராட்டக்களிலே ஆர்ப்பாட்டத்திலே கலந்துக்க வெயில் மழை குளிர் எதுவுமே தடையாக இருக்கறதில்லே.

ஆனாக்கூட அவங்களுக்கு நாட்டின் செல்வத்திலே, வளமையில் பங்கென்று வரும்போது கறிவேப்பிலையின் கதிதான். ஏன்? கண்டுபிடிடுச்சுடுவோம்.

## (2) விவசாயி, விவசாயக்கடன்லே சாகலாமா?

கம்ப்யூட்டரோ, ஷாப்பிங் மால்களோ, கார்களோ, விமானமோ இல்லாமல் மக்கள் வாழ்ந்த காலங்கள் உண்டு. ஆனால் ஏழைகளுக்கு இந்த நாளும் அந்த நாளும் ஒண்ணுதான்யா.

ஆனால் ஏழைகள் இல்லாமே இதுங்க எதுவுமே இருக்கு முடியாது உண்மைதானுங்களே.

ஒரு நாள்கூட, சாப்பிடாம இருக்க எந்த சமுதாயம் என்னிக்கும் பழகினதில்லை. ஆனாக்க, நம் நாட்டுலே ச ாப்பாட உற்பத்தி செய்வதிலே ஏழைகளின் பங்குதான் அதிகம். அப்படி என்றாலும் பட்டினியால் சாவரதும் ஏழைங்கதான். விவசாயத்துலே ஏற்படும் கடன் தொல்லையிலே தற்கொல பண்ணிக்கிட்டு சாவரதும் அந்த ஏழ விவசாயிதான்.

## (3) ஆபத்தான வேலைகளுக்கும் ஏழைகளே!

ஆபத்தானதோ, அவசியமானதோ எல்லா தொழில்களிலும் அதிகமாக ஈடுபடுவது ஏழைங்க தானே! தீபாவளி அன்னிக்கி பட்டாசு வெடிச்சு வசதியான ஊட்டுப் பிள்ளைகள் எல்லாம் சந்தோசமா இருக்குதில்லே. ஆனாக்க எத்தனையோ ஏழ வீட்டு பிள்ளைகள் வருசம் முழுக்க வயத்தக் கழுவ பட்டாசு பண்ர தொழில் சாலையிலே வேல செய்றாங்க. போகட்டும், வருசா வருசம் இந்தப் பிள்ளைகள் மத்தியிலே எத்தன பேரு, பட்டாசு தொழில் சாலைகளிலே விபத்து ஏற்பட்டு, தீப்புடிச்சு, சாவறாங்க?

ஆழ்கடலில் மீன் பிடிப்பதும், கரிச்சுரங்கங்களில் வேலை செய்வதும், நாட்டு எல்லைகளை கடும் குளிரில், காவல் காக்கரது, எதிரிகளின் ஊடுருவல்களைத் தடுக்க தன் உயிரை தியாகங்கள் செய்வது, தீவிரவாதிகளை எதிர்த்துப் போராடுவது, இவை எல்லாமே தன் உயிரைப் பணயம் செய்யர தொழில்தானே. இதுங்கள்ளே இருக்கிர மக்கள் எல்லாருமே, பிறவியிலிருந்து ஏழைகள்தான்.

பலமுறை, பொது மக்களின் நலனுக்காக, குறைந்த கூலிக்கு பாதாளச் சாக்கடைகளை சுத்தப்படுத்த முயன்று, தன் உயிரை இழந்தவர்களும் ஏழைகளே!

## (4) தீவிரவாத்தத்தில் ஏழைகள்

பசி வயத்த கவ்வரப்போ, தொழிலாளிவர்கம், முதலாளி வர்கமுன்னு பிரிச்சு வைத்து சில தலைவருங்க ஏழைகளை வச்சு பிழைழக்கரவங்க எப்போதுமே இருப்பாங்க.

இந்தப் போராட்டக்காரங்க கூவரது சுகமா இருக்குமய்யா. தகராரு வரும்போது ஏழைங்க அடிபட்டு சாகரப்போ, இவங்க தலையே பாக்க முடியாது.

ஏழங்களோட கஷ்டத்துலே நெரய பேருக்கு ஆதாயம் இருக்கு. தலையிலே முடியத் தவிர வேற எதுவும் இல்லாத முண்டங்க ஏழைங்க.

நாட்ட பிரிக்கணும்பான், மானிலத்த பிரிக்கணும்பான், எல்லைய நகத்தணும்பானுக. ஜாதியால ஏழைங்களே பிரிச்சுடுவானுக. இதில் எல்லாத்திலும் ஏழைங்க ஒத்தன ஒத்தன் அடுசிக்கிட்து சாவானுக. எல்லாத்துலேயும் ஆதாயம் வருவது சில தலவருங்களுக்கு.

ஆனாக்க எத்தயாவது சொல்லி வயத்துக்கு இல்லாதவனே இதுலே மாட்டிருவாங்க.

ஐரோப்பிய நாடுங்க இருக்கு, அமெரிக்கா - கனடா அடுத்து இருக்குங்க. அவனுக நாட்டுலெ உள்ளூர்க்காரன் அடிச்சுக்கிட்டு சாவரானுகளா? அடுத்த நாட்டுக் காரனோட சண்டையிலே சாவராங்களா?

ஏன் தெரியுமா? அங்கே இத்தன மோசமான சூழ்நிலையிலே வாழ்கிற ஏழைங்க இல்ல.

தீவிரவாத இயக்கங்கள், பொதுவாக, வளந்த நாடுகளோட, கை இல்லேல்லேன்னு சொன்னாங்கனா அது ஒரு பெரிய பொய்.

ஊரு இரண்டு பட்டா கூத்தாடிக்கு கொண்ட்டாமா. ஆடுங்க சண்ட போட்டா ஓனாயிங்களுக்கு கொண்டாட்டம் மனிதர்கள் சண்டை போட கோடிக்கணக்குலே பணம் போட்டு முதலீடு பண்ணி பொருளாதார ஆதாயம் பாக்குராங்க. இது எல்லாம் படிச்சவங்களுக்கு புரியும்.

ஆனா ஏழைங்க மண்டேலே ஏறாது. ஏதோ கஞ்சிக்கு காசு கிடைத்தால் சரி என்று மாட்டி விட்டுட்டாக்க எதையும் செய்வாங்க.

எத்தனயோ சின்ன நாடுங்களிலே கஞ்சிக்கே வழியில்லை. அவனுக மெசின்கன்னு வைத்து சண்டை போட காசு எங்கேந்து வருது? அடிச்சிட்டு சாகிற எவனுக்கும் அது தெரிவதற்கு நியாயமில்லை.

தீவிரவாதிங்களே அப்பப்ப மாட்டராங்கள் இல்லியா. விச ாரணை ராணுவம் அவங்களை விசாரணை செய்யிரப்போ தெரிய வருவது என்ன தெரியுமா?

ஏழை இளைஞர்களை துப்பாகி பயிற்சி கொடுத்து மாசம் இத்தனை ரூவான்னு சம்பளம் கொடுத்துடுவானுங்களாம். பிடிபட்டு செத்தாக்க குடும்பத்துக்கு ஒரு லட்சம் ரெண்டு லட்சம் பணம் தருவாங்களாம்.

நம்ம குடும்பமாச்சும் வாழட்டும்ன்னு ஏழைங்க. விட்டில் காட்டு நரி நாட்டுக்குள்ளே நுழைந்து லாரியிலே அடிபட்ணுது சாகும் இல்லையா அப்படி தீவிரவாததுலே மாட்டிகிட்டு சாகிறாங்களாம்.

# அத்தியாயம் 09
# ஏழைகளை, ஏழ்மை ஏன் தொடர்கிறது?

## இப்போது காரணங்களைத் தேடுவோம்

பாம்பு – கீரிச் சண்டை



**காரணம் 01: அறிவையும், நினைவாற்றலையும் வளர்க்கத் தெரியாதது / தவறியது.**

ஒரு நல்ல உதாரணம், பாம்பு கீரி - சண்டை.

இதை சுமார் நாற்பது ஆண்டுகள் முன்னால் வாழ்ந்தவங்க அடிக்கடிப் பாத்த ஒரு காட்சி.

வாராந்திர சந்தை கூடுர இடம், கடைவீதி என்று அதிக

மக்கள் நடமாட்டமிருக்கும் இடங்களில், பலவிதமான வித்தைகள் காண்பிச்சு, அதை வைத்து பிழைப்பு நடத்திய ஏழைகள் பலர் இருந்தாங்க.

இதில் மிக பிரபலமானது ஒண்ணு பாம்பு-கீரி சண்டை. யாரோ இரண்டு மனுசங்க சண்டை போட்டாலே வேடிக்கை பாக்க கும்பல் கூடும்போது பாம்பும் - கீரியும் சண்ட போடரத பாக்க ஆவலா இருப்பாங்கள்ளே!

வித்தை காட்டரவரு பாம்பு-கீரி சண்டையைக் காட்றதா சொல்லிக் கூட்டம் கூட்டுவாரு,. காசு வசூல் செய்வாரு அதத்தான் எல்லாரும் பாத்திருப்பாங்க. ஆனால் பாம்பு - கீரி சண்டையை மாத்திரம் யாருமே பார்த்ததில்லை.

வேடிக்கை பார்க்க கூடிய மக்கள் எத்தனை முறை காசு கொடுத்தாலும் எத்தனை நாள் காத்திருந்தாலும், கீரி பாம்பு சண்டையை மட்டும் எப்பவும் பாக்கவே முடியாது.

பாம்பு கீரி சண்டையைப் பார்க்க கூடிய ஏழைகள், ஒரு கட்டத்தில், பொறுமையை இழந்துட்டு அந்த இடத்திலிருந்து நகர்ந்து போயிடுவாங்க. கூட்டம் குறைந்த்ததும், மூட்டை கட்டிக்கொண்டு அங்கிருந்து காணாமல் போய்விடுவார் வித்தைகாட்டும், வியாபாரி.

நடராஜன் சார் அத விளக்கினாரு:

வித்தைக்காரரிடம் இருக்கரதோ ஒரு கீரியும் ஒரு பாம்பும். இதுக இரண்டும் சண்டை போட்டாக்க ஏதானும் ஒன்று செத்துடும்.

அப்புரம் வித்தைகாரர் பிழைப்புக்கு என்ன பண்ணுவாரு? சும்மா கூட்டம் கூட்டி, சாதா மடையர்களை மாங்காய் மடையர்களா மாத்தி, பிழைப்பு நடத்துவது இந்த வித்தையின் பின்னால் மறைஞ்சுள்ள ஒரு உண்மை.

*இதை வேடிக்கை பாக்கரவங்க என்னிக்கும் தெரிஞ்சுக்கிரதில்லை. பாம்பு கீரி சண்டை நடக்கவே நடக்காதுன்னு இவங்களுக்கு எப்பவும் புரியாது. ஏன்னாக்க இவங்க ஏழைங்க.*

புரியாது என்கிற ஒரே காரணம் ஏழைகள் பரம்பரையாக ஏழையாக இருக்காங்க. ஏன்னாக்க, காசைக் கொடுத்துட்டு, கால் வலிக்கக் காத்திருந்து வேடிக்கை பார்க்க காத்திருப்பவங்க, என்னிக்குமே ஏழைகள் மட்டும் தான்.

ஏழைகள் எல்லோரும் இதை புரிந்து கொள்ளும் நாள் வரை கீரி-பாம்பு வித்தைக்காரர் பிழைப்பு நன்றாகவே நடக்கும்.

வித்தைக்காரர்கள் சுகமாக வாழும் காலத்தில் ஏழைகளை, ஏழ்மை விடாது தொடரும்.

## ஒரு அரசியல் பாடம்:

இந்த கீரி - பாம்புச்சண்டை வித்தையிலிருந்து வியாபாரிகளுக்கும், அரசியல் தலைவர்களுக்கும் ஒரு பாடம் கிடைத்தது.

மக்களில் பெரும்பாலோர் மாங்காய் மடையர்களே. யார் எதைச் சொன்னாலும் நம்புவாங்க. எந்தக் காலத்திலும் நம்புவாங்க என்பதுதான் அந்தப் பாடம்.

தலைவருங்கெல்லாம் பல தடவை வறுமையைத் தொலைக்க நாள் குறிப்பாங்க. ஏழைதான் அழிவான், ஏழ்மை இல்லை. குறிப்பிட்ட நாட்கள் தொலையும். ஆனாக்க ஏழ்மை என்றுமே இளமையுடன் நெடுங்காலம் வாழும்.

ஏழைகளுக்கு அறியும் சக்தி வரும் வரை ஏழ்மைக்கு ஆரோக்கியம் குறையாது.

ஏழையும் ஏழ்மையும் ஒன்றை ஒன்று கட்டிக்கொண்டு பல பிறவிகள் எடுத்தும் கூட இருவரும், ஒருவரை ஒருவர் பிரிவதில்லை.

அப்படியிருகரப்போ, தப்பித்தவறி ஒரு சில ஏழைகள் எழ்மையின் இரும்பு பிடியியிலிருந்து தப்பிச்சு கோடீச்வரர்களின் பட்டியலில் இடம் பெற்றிருப்பது எப்படி ?

## பிரான்ஸ் நாட்டிலும் மாங்காய் மடையர்கள்

நம்மை விட தொழில், பொருளாதாரம் ஆகியவற்றில் முன்னேறிய நாடுகளிலும் ஏழைகள் ஓரளவுக்கு இருப்பதை உறுதி செய்ய, ஒருநிகழ்ச்சி. பிரான்ஸ் நாட்டின் முன்னாள் அதிபர் சார்லஸ் டீகால் என்பவர் தெரிவித்தார் என்பதாக டைம்ஸ் ஆப் இண்டியா என்ற நாளேட்டில் வெளியானது. அதன் சுருக்கம்:

இந்த மக்கள் நாம் (அரசியல்வாதிகள்) என்ன (பொய்) செ ன்னாலும் நம்புகிறார்களே !

அரசியல்வாதிகளோ, (அல்லது யாராயிருந்தாலும்) அப்பட்டமாக பொய்கள் கூறி, அதை அப்படியே நம்பும் மக்கள் அறிவிலோ, சிந்தனையிலோ அல்லது இரண்டிலும் குறைந்த மனிதர்கள்தானே.

நமது கல்வி முறைகளும் கல்வித் திட்டங்களும் நல்ல திறமை உள்ள கிளார்க் மற்றும் தொழிலாளிகளையும், மாத்திரமே உருவாக்கும் திறன் உள்ளது.

அறிவு, அறிவாற்றல் படைத்தவர்களை உருவாக்கும் திறன் இல்லை.

போகப் போகத் தெரியும்.

# அத்தியாயம் 10
# ஏழ்மையை ஒழிக்க ஏழைகளின் உதவி அதிகம் தேவை.

(அ) ஏழ்மையைத் தொலைக்க ஏழைகள் விரும்ப வேண்டும்.

(ஆ)ஏழ்மையின் காரணத்தையும் உணரவேண்டும்.

(இ)வெற்றி கொள்ளும்வரை, ஏழ்மையைத் துரத்தும் வழிகளில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளவேண்டும்.

ஏழைகள் ஏழ்மையை ஒழிப்பதில் மிகப் பெரிய தடைகள் முதல் இரண்டு படிகள். சுலபமச்ானது மூன்றாவது மட்டுமே!

**மற்ற இடையூருகள்**

(அ) ஏழைகளுக்கு மனம் இரங்கும் மனிதர்களைவிட, அவர்களின் அறியாமையை தங்களுக்கு சாதகமாக்கி லாபம் காணும் மக்களே அதிகமாக உள்ளனர்.

(ஆ) அறிவின் குறைவால், ஏழைகள் தங்களுக்கு சாதகமாக பேசி ஏமாற்றும் மக்களை நம்பி, பின் தொடர்வது மிகப் பெரிய குறை.

கசாப்புக்காரனை பின் தொடரும் ஆடுகளுக்கும் இப்படிப்பட்ட மனிதருக்கும் வேறுபாடு மிகவும் குறைவு.

(இ) மனிதருக்குள் மறைந்து வாழ்ந்து மனிதனை பிறருக்கு அடிமையாக்கும் குரங்குத் தன்மை ஏழைகளுக்கு சற்று அதிகம்.

குரங்குகள் கடலைக் குப்பியைப் பிடித்தால், இவர்கள் மனிதர்கள் எதைக் கொடுத்தாலும் பிடித்துக் கொள்வார்கள்.

(ஈ) ஏழ்மையிலிருந்து தப்பிக்க, சிறிது அதிக அறிவுள்ள ஏழைகள் மற்ற ஏழைகளைச் சுரண்டுவதை உணர்வதில்லை. ஏழைகளாகவே தங்கள் வாழ்வைத் தொடர எத்தனை திட்டங்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்?

(உ) ஏழைகளச் சுரண்டும் பலர் மாஜி (முன்னாள்) ஏழைகளே.

ஞானிகள் மற்றும் சித்தர்கள் ஆகியோர் மட்டும் ஏழ்மையை விரும்பி அடைவதாகச் சொல்லலாம்.

**ஏழ்மையை ஒழிக்கத் தடையான மீத காரணங்கள்:**

* ஏழ்மை நிறைந்த நமது நாட்டிலும், நம்மைப்போன்ற வளரும் மற்றும் வளராத நாடுகளிலும் ஏழைகள் இல்லாமல் அரசியல் இல்லை என்ற நிலை.

* அரசியல் கூட்டங்கள், கட்சி மாநாடுகள், மறியல்கள், தீக்குளித்தல், போராட்டங்கள், ஆர்ப்பாட்டங்கள் ஆகியவற்றிற்கு ஆள் தேவையா? ஏழைகள் தயார்.

குறைந்த செலவில், ஆள் ஒன்றிற்கு ரூ 100, ஒரு பாக்கெட் சாராயம் ஒருவேளை உணவு தந்தால் போதும். பல ஏழைகள் என்றும், எதற்கும் தயார்.

எண்ணிக்கை இல்லாத போராட்டங்களுக்கு, போலீஸ் நடத்தும் தடியடியைப் பெறுவதற்கு, துப்பாக்கி சூட்டில் சாக ஆள் வேண்டுமா? ஏழைகள் தயார்!

மதம் இனம் ஜாதி என்று மக்களை பிரித்து சண்டையிட்டு சாக ஆள் வேண்டுமா? ஏழைகள் என்றுமே தங்கள் தலைவர்கள் பக்கம் நின்று, தன் உயிரைக் கொடுத்திருக்கிறார்கள்.

ஆக பலவிதமான தலைவர்களுக்கு இந்த ஏழைகள் இல்லாமல் வாழ்வு இல்லை. ஒரு நாட்டில் ஏழ்மை குறைந்தாலே அரசியலில் ஒரு பெரிய சுனாமி வந்து விடும். எனவே ஏழ்மையை ஒழிப்பதை பற்றி பல நூறு வருடங்கள் பேசுவார்கள்.

செய்ய வேண்டுவதை மாத்திரம் செய்ய மாட்டார்கள்.

ஏழ்மையை ஒழிக்க யாரும் தீவிரம் காட்ட நல்ல காரணம் எதுவும் இல்லை.

அப்படியே, ஒரு சிலர் நல்லவர்கள் இருந்தாலும், அவர்கள் தம்மால் இயன்ற சிறிய சிறிய உதவிகள் செய்யமுடியும் அவ்வளவுதான். உதாரணம்,

பசித்தவருக்கு அன்னதானம், ஏழைகளுக்கு ஒரவுக்கு பணம், கல்வி மற்றும் மருத்துவ உதவி, அனாதை விடுதிகளை நிறுவி பராமரிப்பது, போன்றது.

கைவிடப்பட்ட முதியோர், குழந்தைகள் என்று பலதரப்பட்ட ஆதரவு இல்லாதவர்களுக்கு கைகொடுக்க எண்ணற்ற சிறிய, பெரிய இயக்கங்களும் நம்மிடையே உண்டு.

இவை எல்லாமே மக்களின் மனிதாபிமானம் குறையவில்லை என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. ஆனால் எங்கு அதிகாரமும் செல்வமும் குவிந்து இருக்கிறதோ, அந்த இடத்தில் இது காணப்படவில்லை.

பிறருடன் பகிர்ந்து கொள்ளும் அளவுக்கு செல்வம் படைத்தோர் பல இருந்தாலும், அதில் பிறருடன் பகிர்ந்து கொள்ளும் மனம் படைத்தவர்கள் மிகவும் குறைவு. பயனடைய வேண்டியவரோ எண்ணிக்கையில் பல ஆயிரம் மடங்கு.

ஏழைகளுக்கு, தங்கள் துயரம் தீர நிரந்தர வழி வகைகள் தேவை. இதை அடைய ஒரே வழி - அ றி வு.

அதை அடையும் வழிகளைப் படிப்போமா?

**ஏழ்மையும் சினிமாவும்**

அறிவு இருக்கிறவர்களுக்கு சினிமா ஒரு பொழுதுபோக்கு. அறிவில்லாத காரணத்தால் ஏழ்மையை அடைந்தவர்களுக்கு அதுவே ஒரு வாழ்க்கையின் முக்கிய அம்சம்.

## அத்தியாயம் 11

# ஏழ்மையை விரட்ட என்ன செய்யணும்? என்ன என்ன தெரியணும்?

எதெல்லாம் செய்யக் கூடாது என்று முதலிலே தெரிஞ்சிக்கணும். அதோட, என்ன செய்யலாம் என்கிறதையும் சேர்த்து பாக்கலாம்.

என்னிக்கும், அதி வேகமா பணக்காரன் ஆயிடனும் என்கிற கனவு வேண்டவே வேண்டாம். ஏன் தெரியுமா?

* சுலபமா (உழைப்பு இல்லாமல்) வந்த - வெற்றியோ, செல்வமோ, , எதுவானாலும், நிலையாக இருக்காது.
* அதைப் போல வேகமா வந்த எதுவும், வேகமா ஓடிடும்.
* முன்னேற்றம் கூட, ஒரே சீரா, படிப்படியா இருப்பது அவசியம்.
* விரும்பியதை அடைய தீவிர விருப்பமும், விடா முயற்சியும் அவசியம்,

சில ஆட்கள், குறுக்கு வழியிலே வேகமாக பணக்கார ஆயிடலாம். என்னோட சேர்ந்தீங்கன்ன, உங்களை எங்கேயோ கொண்டு போயிடுவேன்னு சொல்லுவாங்க.

சிக்கின பேராசக்காரனை எவ்வளவோ த்ப்பான வழிகளிலே அனுப்பி தான் பணம் பண்ணிருவான், வேகமா வளர

ஆசைப் பட்டவனை சொன்ன மாதிரியே ஜெயிலுக்கு அனுப்பிடுவான்.

## (1) சிறிய வெற்றிகள் உதவும்.

விடாம வெற்றியைத் துரத்திப் பிடிக்க வேணும். ஆனால் துரத்தவங்களைப் பாத்தவுடனே வெற்றி வேகமாக ஓடி, மறஞ்சுடுதே ஏன்?

நாம் எடுத்த காரியம் வெற்றி அடையவில்லை என்றால். அது ஒண்ணும் அதிசயம் இல்லை. விடா முயற்சி செய்யணும். செஞ்சாக்க பலன் கிடைக்கும். அதோட அறிவை சேர்த்துக்கிட்டா வேகமாவே வெற்றிகள் வந்துவிடும்.

வெற்றிங்கரது காதல் மாதிரி. இரண்டும் எல்லோருக்கும் சு லபமா கிடைச்சுடாது. இத அடைவதற்கு சில ரகசியங்கள் உண்டு. அத இப்போ பாக்கலாம்.

(அ) உலகம் உருவான நாள்ளேந்து தான் பாத்ததை, கேட்டதை எல்லாத்த்திற்கும் ஆசைப்பட்டு. விரும்பிய எல்லாத்தேயும் அடைய மனுசனுக்கு ஆசை.

ஆசப்பட்டத அடைவதற்கு சூழ்ச்சிகள் செஞ்சாங்க, சண்டை போட்டாங்க, ஆட்களை கடத்துனாங்க. தடுத்தவனுகள கொன்னானுக. அப்படி செஞாக்கூட ஆசப்பட்டதுலே கொஞ்சம் பேருக்கு ஏதோ ஒண்ணு அறை கிடச்சிருக்கும். பாக்கி பேருக்கு உயிரு போச்சு.

ஆனாக்க இன்னி வரைக்கும், ஆசைப்படர எல்லாத்தையும் அடையருத்துக்கு தேவையான வழிமுறைய யாராலுமே கண்டு பிடிக்க முடியல்லை.

(ஆ) நாம ஆசையும் முயற்சி செய்வது மட்டுமே நமக்கு வெற்றிய தேடித்தராது. ஆனா, இரண்டும் மிக மிக அவசியம்.

(இ) முயற்சி, உழைப்பு இரண்டும் பண்ணாமே எதுவும் கிடைக்காது. அபடியே கிடைச்சாலும் அது நிலைக்காது.

(ஈ) நமது தோல்விகள் நமக்கு உடன் பிறப்புங்க போல

ஒண்ணு. இயற்கையாக வரும். அது தப்பில்லேன்னு, அறிவ அடஞ்சதுக்கு அப்புரம் புரிஞ்ப்போம்.

(ஒ) நமக்கு வரும் வெற்றி இருக்கிறதே, அது பல இடயூருகளைத் தாண்டி சரியான சமயம் சந்தர்ப்பம் பார்த்து, சூழ்னிலையப் அனுசரித்து எப்போதாவது நம்மை அடஞ்சுடும். இதுக் சரியான ஆங்கில வார்த்தை Chance. நம்ம வெற்றி வரணமுன்னு (பஸ் ஸ்டாப்புலே நிக்கிறமாதிரி) நிக்கப்படாது. ஓடிக்கிட்டே இருக்கணும்.

## சான்ஸ்:

சான்ஸ் என்கிற ஆங்கில வார்த்தைய நாம தப்பா உபயோகிக்கறோம்.

ஸ்டாடிஸ்டிக்ஸ் என்ற கணித விஞ்ஞானத்துலே பயன் படுத்துகிற சான்ஸ் (Chance) என்கிற பதம் இங்கே பயன் படுத்தரோம். (பொதுவாக நாம், Chance என்பதற்கு, தற்செயலாக அல்லது நமது முயற்சியே இல்லாமல் நிகழ்வது என்ற பொருள்படும்படி, தவறாகப் பயன் படுத்துறோம்),

கணிதம் சொல்கிற சான்ஸ் எப்படிப்பட்டது?

உதாரணத்திற்கு, தினசரி நாம பார்க்கிற காட்சிகள்ளே ஒண்ணு, இடம். நகரத்தின் ஒரு பகுதியில், பஸ் ஸ்டாப் அல்லது ஒரு நகரப் பேருந்து நிற்குமிடம்.

காலை வேளை. பள்ளி - கல்லூரி மாணவர்கள் வேலைக்கு போகிற ஆண் -பெண் ஆகியோர், காய்கறிகள் விற்பனை செய்பவர்கள் என்று பல தரப்பட்ட மக்கள் பஸ்வராதான்னு பார்த்துக் கூடியிருக்காங்க.

வரிசையில் நின்னு அமைதியாக பஸ்ஸில் ஏறுவதிலெ நம்ம மக்களுக்கு என்னிக்கும் நம்பிக்கை இருந்ததில்லை. ஒருவரை ஒருவர் தள்ளி விட்டுட்டு தான் மட்டும் பஸ்ஸில் ஏறிவிடனும்னு ஒரு வெறி.

இந்த பஸ்ஸை விட்டு விட்டாலோ, இன்னிக்கி முழுக்க வேறு ஒரு பஸ்ஸும் இல்லைங்கறது போல ஒரு அவச

ரம்.

இதை தினம் தினம் பார்க்கிற பஸ் டிரைவருங்க, பஸ்ஸை பஸ் ஸ்டாப்புல நிறுத்துரதில்லே. சரியாக நிறுத்தவேண்டிய இடத்திற்கு கொஞ்சம் முன்னாலே இல்லே பின்னால் நிறுத்துவாங்க. பஸ் நிறுத்தியதும், கூட்டம் முன்னும் பின்னும் ஓடிவாறு இருக்கும். ஏற முடியாது என்ற நிலை வந்ததும் பலர் அடுத்தடுத்து வரும் பஸ்ஸிற்காக காத்திருப்பாங்க.

பல பஸ்கள் வருவதும் போவதுமாக இருக்கும். ஆனாக்க நாம ஒரே இடத்திலே நிக்கரோம். மற்றவங்களோடு போட்டி போட்டுகிட்டு ஏற்றதுக்கு முடியல்லேன்னு நினைத்துக் கொள்ளுவோம். பல பஸ்கள் வருது.நம்மை ஏத்திக்காமல் போயிடுது.

ஒரு கட்டத்துலெ, ஒரு பஸ் வருது. பஸ்சுல துள்ள படிக்கட்டு சரியாக நாம நிற்கும் இடத்திற்கு நேராக நிற்கிறது. நமக்கும் படிக்கும் நடுவுலே ஒரு கூட்டம் இருக்கு. அவங்க எல்லாம் நம்மள பின்பக்கமா தள்ளுராங்க.

அதே சமயம், நமக்குப் பின்னாலே ஒரு பெரிய கூட்டம் இருக்குல்லே. அவர்கள் பஸ்சுலே ஏற முயற்சிக்கிறப்போ, நம்மளேயும் பஸ்ஸுக்குள்ளே தள்ளராங்க, நசுங்கி காயம் அடைந்து ஒரு மாதிரியாக பஸ்ஸின் உள்ளே சேந்துடரோம்.

இது யாருடைய வெற்றி? இதுவரை (பஸ்ஸில் ஏற முயன்று) நாம் அடைந்த தோல்விக்கு யார் பொருப்பு? இப்போது கிடைத்த வெற்றிக்கு நம்முடைய பங்கு எத்தனை?

அதுக்கு பதில் நான் சொல்ல வேண்டாம். படிக்கிறவங்க எல்லோரும் புருஞ்சுப்பாங்க.

வீட்டை விட்டு நகராம நாம இருந்தாக்க நிச்சயமாக நாம் தோற்றிருப்போம். இல்லியா? பஸ் ஸ்டாப்பில் நிற்காமல் வேறு ஒரு இடத்தில் நின்னுட்டிந்தாலும் பஸ்லே ஏறமுடியாம தோத்துப் போயிருப்போம். பஸ் நிற்கும்

இடங்களில் ஏதாவது ஒரு இடத்துல நின்னாக்க நாம் பஸ்ஸிலே ஏறுவது உறுதி. நேரம் முன்னப் பின்னே ஆகலாம், சரியான எடத்துலே ஸ்டியா இருந்தாலும் வெற்றி கெடைக்கும். ஓடி ஓடி பாத்தாலும் கிடைக்கும். எதிலுமே மத்தவங்களோட பங்கு இருக்கறத மறந்துடக் கூடாது.

## முடிவா என்ன சொல்கிறேன் என்றால் :

### 1. தோல்விய சந்திக்க தயாரா இருக்கணும்.

வெற்றி வேணுங்கிறவங்க, தோல்வியே வரக்கூடாது. தோல்வி எனக்கு பிடிக்காத்ததுன்னப்படாது.

நாம விடாம முயற்சி பண்ணினோமின்னா எப்பவானும் ள் வெற்றி கிடைக்கும். அறிவு நெறய சம்பாதிச்சிக்கிட்டா வெற்றி அதிகமாகவே கிடைக்கும்.

சுவிட்ச்சைப் போட்டா, உடனே மின்சார விளக்கு எரியரதப்போல முயற்சி செய்த உடனேயே பலன் கிடைக்கணுமின்னா, அதுக்குள்ள வழிய யாருமே இன்னிவ்வணூரக்கு கண்டுபிடிக்கல்லே. யாருக்காச்சு ம் தெரிஞ்சா சொல்லுங்க. பரிச்சேல பெயிலாயிட்டா புள்ளங்க தற்கொல பண்ணிக்குது. காதல்லே தோல்வியா, தற்கொல பண்ணிக்குதுங்க. இது அறிவில்லாதவங்களோட கேரக்டருங்க இப்புடித்தான் இருக்கும்.

### 2. மாற்றில்லா விருப்பம் இருக்கணும்.

வெற்றி பெருவதுக்கு ஒரு தீராத விருப்பம் அவசியம். இ தை மாற்றில்லா விருப்பம் என்று சொல்வாங்க. மாறும் வி ருப்பங்கள் வெற்றி தருவதில்லை. அப்படியே கெடச்ச ாலும் மகிழ்சி தரதில்லே.

### 3.விடாமுயற்சி ஏன் அவசியம்?

முயற்சி வெற்றிக்கு ரொம்ப ரொம்ப அவசியம். ஆனாக்க விருப்பமும், முயற்சியும் மாத்திரம் வெற்றி அடயரதுக்கு போதாது. வெற்றிக்கு, வாழும் சூழ்னிலைகளும் ஒரு முக் கிய காரணமாயிருக்கு..

கண்ணால பாத்து சரியான சந்தர்ப்பம் எதுன்னு தெரிஞ்சு

க்க முடியாது.

சாராதணமா இந்த, சந்தர்ப்பம் சூழ்நெலை - எப்ப நாம வெற்றிக்கு சாதகமாக அமையுங்கரது தெரியாது. அறிவ ஓரளவு அடஞ்சு விட்டோமின்னா இதுவும் தெரிஞ்சு துடும்.

அதுனாலே, நாம விடாம செய்யர எந்த ஒரு முயற்சியும், (தக்க சமயத்திலே, தவறாது வெற்றியைத் தரும்). அதனால், வெற்றி பெறும் வரை, இடை விடாது முயற்சியைத் தொடரணும்.

**4. எச்சரிக்கை: ஏழ்மை திரும்பிடும்.**

கவனம் கொஞ்சம் குறைஞ்சிட்டாலும் சரி அறிவு குறைசிட்டாலும் சரி, சம்பாதிச்ச காசு ஓரேடியா ஓடிடும். ஏழ்மை நம்ம தேடிக்கிட்டே இருக்கு. அது ஓடியாந்து நம்மபக்கத்துலே ஒக்காந்திரும்.

ஏழைங்களே.நம்ம உலகம் எப்பவும் நிற்க்காமல் ஓடுகின்ர ஒன்று.

கவனிச்சுப் பாருங்க, உலகத்துலே எல்லாமே ஓடும். வந்தது போயிரும், போனது போகாதது எல்லாம் வந்திடும். இந்த உலகத்தில் சொத்தும் - சுகமும், வளமையும் - ஏழ்மையும், இளமையும் - முதுமையும், எதுவும் நிக்காதுய்யா.

அடுத்தடுத்த சந்ததிகள் அனைவரும் சுகமாக வாழ வேண்டும் என்று நினைக்காதவர்கள் மிகவும் குறைவே! ஒரு தந்தை, அல்லது பாட்டன் என்று யாரோ ஒருவர் தான் கருமியாக வாழ்ந்து வயிற்றைக் கட்டிவாயைகட்டி சொத்து சேர்ப்பார்.

அடுத்த தலை முறை தறுதலையாக வளர்ந்து தகராறக வளர்ந்து, தாறுமாறாக வாழ்ந்து மடிந்த செய்திகள் எத்த்னை எத்தனை?

பல தலைமுறைக்கு தேவையான சொத்துகளை குவிப்ப

சரியா தவறா  என்பது இப்போது விவாதம் செய்வதற்கில் லை.

உழைக்காமல்  வாழ்வதுதான் சுகமான வாழ்க்கை என்ற த வறான  எண்ணம் தான் இவற்றின் அடிப்படை.

நாம் கவனிக்க வேண்டியது, உழைக்காமல் கிடைத்த செ ல்வத்தால் மகிழ்வுடன் வாழ்ந்தவர்களைவிட கெட்டு சீர ழிந்துவர்களே அதிகம்.

அப்படி சந்ததிகளுக்கு சொத்து சேர்க்காமல்,  தவறில்லாத வழியிலே உழைத்துப் பிழைக்க அறிவும் அதன் வழியும் தருவது அதிக பயனைத்தரும்.

நாம், சேர்த்து வைத்த செல்வம் சொல்லாமலே ஓடிவிடும். அதுவும் வேகமாக வந்த செல்வம் அதிவேகமாக ஓடிவிடும். சும்மா ஓடாது. ஓடும் போது பெரும் துன்பத்தையும் நாம் அ டைய காரணமாகிவிடும்.

# அத்தியாயம் 12
# வேகமாக வரும் செல்வம்,,,,,

**ஒரு சிறுகதை.**

சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்னால், ஒரு சித்தர் வாய் வழி வந்த கதை, இது.

செல்வத்தை சுலபமாக அடையும் தொழில் என்ன? எல்லோருக்கும் தெரிந்த ஒன்று. கொஞ்சமோ, அதிகமோ செல்வம் படைத்தவரிடமிருந்து ஏமாற்றியோ, பலவந்தமாகவோ அபகரிப்பது. கடந்த காலங்களில் கள்வர்கள், கொள்ளையர்கள் என்ற இருவகை மக்களே இருந்தார்கள். ஆனால் இன்று இதே தொழிலுக்கு பலத்த போட்டி மட்டுமில்லை, வேறு தொழில் செய்பவர்கள் கூட (பகுதி நேரமாக) வழிப்பறி, கொள்ளை ஆகியவற்றை செய்து வருவது கண் கூடு.

இந்த பகுதி நேர சேவையில் பலவித வியாபாரிக்கள், அரசாங்க அதிகாரிகள், மருத்துவர்கள் என்று தனி மனிதர்கள் மட்டும் இல்லை அரசாங்க அங்கீகாரமும் அனுமதியும் பெற்ற பல நிறுவனங்களும் இயங்கி வருவதையும் நாம் காஙிறோம். இப்பொழுது கதைக்குத் திரும்புவோம்.

## கதை: நான்கு கூட்டாளிகள்

சித்தர் ஒருவர் நள்ளிரவு நேரத்தில், தன் வீட்டிற்கு திரும்பும் வழியில் நான்கு மனிதர்கள் செத்துக்கிடப்பதை காண்கிறார். இருவர் வெட்டப்பட்டும் மற்ற இருவர் காயங்கள் எதுவும் இல்லாமல்.

சித்தர்களுக்கு ஒருவரை (நிகழ்ச்சியை)க் கண்டவுடன், நடந்தது, தற்போதய நிகழ்வு, பின்னால் நடக்கப் போவது என்ற மூன்றையும் அறிரை சக்தி உண்டென்று நாம் அறி

வோம் இல்லையா? அவர் அறிந்தது கீழ்வருமாறு.

நான்கு திருடர்கள் ஒரு வீட்டில் திருடிவிட்டு அருகிலிருந்த காட்டுப் பகுதியில் ஒளிகிறார்கள். எல்லொருக்கும் கடும் பசி.

நான்கு மனிதர்களில் ஒருவர் சொல்கிறார், யாராவது இருவர் அடுத்து இருக்கும் கிராமத்திற்கு சென்று சாப்பிட்டுவிட்டு மற்ற இருவருக்கு சாப்பாடு கொண்டுவரலாம். அதுவரை. கொள்ளையடிக்கப் பட்ட பொருட்களுக்கு மற்ற இருவர் பாதுகாப்பாக இருப்பாரகள். இதை மற்ற மூவரும் நல்ல ஒ ரு ஏற்ப்பாடாக வரவேற்க, இருவர் சிறிது பணத்துடன் அ டுத்துள்ள கிராமத்தை அடைந்தார்கள்.

தாங்கள் சாப்பிட்டுவிட்டு திரும்பும்போது இவர்களுக்கு ஒரு ஐடியா உதித்தது. இந்த உணவில் விஷம் கலந்தால், காத்திருக்கும் இருவரும் செத்துவிடுவார்கள். கொள்ளை அ டித்த காசு பொருள் அத்தனையும் நாம் பங்கு போட்டுக் கொள்ளலாம். சோற்றில் விஷம் கலக்கப்பட்டதுது.

கத்திருக்கும் இருவருக்கும் வேறு ஒரு உத்தி. உணவு கொண்டு வருபவரை கத்தியால் வெட்டி கொன்றுவிட் டால், மொத்த கொள்ளையையும் நாமே பகிர்ந்து கொள்ள லாம்.

உணவு கொண்டுவந்த இருவரையும் மறைந்து நின்று வெட்டிக் கொன்றார்கள். பிறகு நிதானமாக கொல்லப்பட்ட கூட்டாளிகள் கொண்டு வந்த உணவை தின்ற சிறிது நே ரத்தில் அவர்களும் மரணத்தின் பிடியில் சிக்கினார்கள்.

சித்தர், பொருள் தரும் மோகத்தில், வாழ்கையை வள மாக்கும் எண்ணத்துடன். முழுவதுமாக வீணாக்கிவிடும் ம னிதர்களை நினைத்து வேதனையுடக நகர்கின்றார்.

# அத்தியாயம் 13
# கடவுளும் கந்தசாமி அண்ணனும்.

நடராஜன்: கந்தசாமி, இந்த புத்தகத்தை படிச்சுட்டு வரவுங்க, என்னடா, ரொம்ப முக்கியமான விசயத்துக்கு இன்னமும் வரல்லியேன்னு வருத்தப் படுவாங்க இல்லே.

இப்போ சின்ன கேள்வி கேட்கறேன். பதில் சொல்லுங்க. கடவுள், திடீர்ன்னு உங்க முன்னாலே வந்துடரார். அவர் கிட்டே என்ன வரம் கேப்பீங்க?

கந்தசாமி: உங்களுக்கு தெரியும், நான் என்ன கேட்டிடுவேன்னு. வாசகருக்குத் தெரியாதில்லே.

கதை ஒன்றைப் படிச்சு ரொம்ப நேரம் ஆயிருச்சுல்லே ரஷ்ய சிறுகதை மன்னர் லியோ டால்ஸ்டாய் இதே கருத்தில் எழுதினத, இதை பள்ளிக்கூடம் படிக்கிறத்தே படிச்சதா நினைப்புன்னு, நீங்கதான் இந்த கதைய எனக்கு சொன்னீங்க.

நீங்க கேட்ட கேள்விக்கு என்னோட பதில் இதுலே இருக்கு,

**கதை : வசதியாக வாழ எத்தனை செல்வம் தேவை?**

பாரதியாரு வசதியாக வாழ என்னென்ன வேணுமின்னு பராசக்திக்கி ஒரு அப்பிளிக்கேஷன் போட்டாருல்லே.

காணி நிலம் வேண்டும், அங்கே நிறுத்தல்லே, ஏழங்களுக்கு கொறைஞ்சது என்னென்ன வேணுமின்னு ஒரு பட்டியல் போட்டிருக்காரு. - காணிநிலம் வேணுங்கர பாட்ட கேளுங்க. ரொம்ப நல்லாயிருக்கும்.

இந்தக் கதையிலே வர கதானாயகன் ஒரு விவசாயி. ஓரளவு நில-புலன்கள் உள்ளவர். மேலும் வசதியாக வாழலாமே என்று நினைத்தார். யாருதான் அப்படி நினைக்கல்லே.!

இந்தக் கதை சொன்ன காலத்துலே இப்ப இருக்கரது போல சுலபமாக பணக்காரராக வழி அத்தன வழிகள் அன்னிக்கி இல்லே.

இன்னிக்கி கள்ள ரூபா நோட்டு அடிக்கிறது, கலப்படம் பண்றது, கட்சித் தொண்டரு, கமிட்டி மெம்பரு, வார்டு மெம்பரு, பஞ்சாயத்துலேந்து பார்லிமெண்டு வரைக்கும் மக்கள் பிரதினிதின்ற பேருலே எத்தனையோ வசதிங்கள் இருக்கு இல்லே.

பழைய காலத்திலே, வசதி வேணும்னாக்க என்ன பண்ணுவாங்க? கடவுளை பாத்து, கேட்டுரலாமுன்னு கடுமையான தவம் பண்ணுவாங்க.

தவம் ஒரு சக்திவாய்ந்த ஒரு ஆயுதம். அத வச்சுக்கிட்டு காலம் காலமாக ரிஷிங்க - முனிவர்கள் எல்லாம் கடவுள காக்கா பிடிச்சு, வரங்கள் வாங்கிட்டு வசதி அடைஞ்ச கதை கள் ஏராளமா இருக்குதில்லே.

அதே ரூட்ல போயி, நம்ம கதாநாயகன் விவசாயி, பல வருசம் தவமிருந்தாரு. கடைசிலே, ஒரு நாளக்கி கடவுளும் வந்தாரு.

அவருகிட்டே, எனக்கு வளமான வாழ்க்கை வாழ ஆசை. இப்போ இருக்குற விளை நிலம் போதாது. தனக்கு அதிக நிலம் தந்து உதவணுன்னு வேண்டிக்கிட்டாரு.

பக்தன் அதிகமாக நிலம் எதுக்கு கேக்கரான்? அதிகமா உழைச்சு பிழைக்கதானே. அதனாலே, தயக்கமே இல்லாம கடவுள், தன் பக்தனுடைய வேண்டுகோளை ஏத்துக்கறாரு.

பக்தனுக்கு எத்தனை அதிக நிலம் தரலாம்? கடவுள் யோசிச்சாரு. பக்தனுக்கு சொன்னாரு. ' பக்தா. காலைலே சூரிய உதயம் ஆகும் பொழுது ஒரு இடத்திலிருந்து தொடங்கி சூரியன் மறையும் வரை, நடந்தோ ஓடியோ புறப்பட்ட இடத்தை அடையணும்.

அப்படி அடைஞ்சுட்டாக்க நடந்த இடத்தை உள்ளடக்கிய நிலம் அனைத்தும் நம்ம கதாநாயகனுக்கு வந்துரும்.

அப்படி  வந்து சேந்துடலேன்னா.

புதிசா அவருக்கு நிலம் எதுவும் கிடைக்காது. இதெ செ ால்லிட்டு கடவுள் மறைஞ்சிட்டாரு.

நம்ம விவசாயி, காலையில் எழுந்து ஓடினார். கல் முள் பாக்காமெ ஓடினாரு. தகிக்கும் வெயிலிலே ஓடினாரு. மேடு பள்ளம் பாக்காமல் ஓடினாரு. பசி தாகத்தை அலட்சியம் செய்து ஓடினாரு. பொழுது சாயத் தொடங்கிடுச்சி. புறப்பட்ட இடத்த சேர்ரதுக்கு இன்னமும் சில மீட்டர் தூரம்தான் இருக்கு.

கடவுள், மற்றும் அவரோட தேவர்கள்ளாம், இந்த ஓட்டத்தை வேடிக்கை பாக்குறாங்க.

இன்னமும் ஒரே ஒரு மீட்டர் தொலைவு மிஞ்சியிருக்கு, பசி தாகத்தால் களைத்து, சோர்ந்திருந்த விவாசாயி வெட்டுண்ட மரமாக  தரையில் சாயராரு. அப்போ, சரியா, சூரியன் மறைஞ்சுடுது.

இனிமே இவருக்கு தேவை, ஆறடி நிலம்தான் என்று ொல்லி கடவுளும் வானவர்களும் மறைந்தார்கள்.

விவசாயியின் சொந்த பந்தங்கள் கூடி, இந்த மனுசன் தலைதெரிக்க எங்கிருந்து ஓடிவராருன்னு தெரியாம, விழுந்த இடத்தை அடைஞ்சிடராங்க.  உயிர் போன ஓடம்புக்க்கு இறுதிச் சடங்குக்கு தயாரானார்கள்.

கதை முடிந்தது. அதன் கருத்தை அலசுவோமா?

இந்தக்  கதை சொல்ற பாடம்தான் என்ன?

ஐய்யா. செல்வம் கொஞ்சமா இருக்குற மக்களுக்கு, அதிகமான செல்வம் இருந்தா அதிக சுகம் வரும்னு ஒரு தப்பான எண்ணத்தை வளத்துகிட்டாங்க.

அதுனாலே வாழ்க்கை என்னும் பாதையிலே. வாழரத்துக்கு மறந்திடராங்க. இருக்கிறது போதாது. இன்னமும் கொஞ்சம் செல்வம் வேண்டும் என்று,  தலை தெரிக்க வாழ்நாள் முழு வதும் ஓடுராங்க.

இந்த ஓட்டத்தில், களைச்சு, சோர்ந்து போயி, சேர்த்த

சொத்து அப்படியே இருக்கறப்போ, வாழாமயே செ த்துடராங்க.

(1) ஓரளவு செல்வம் வறுமையில்லாம, பசி பட்டினி இல்லாம நலமாக வாழ உதவும். ஒத்துக்கிடலாம். உண்மைதான்.

ஆகவே, ஏழைகளே வாழ்வதற்கு மாத்திரம் செல்வம் தேடுங்கள். சேத்து வச்சிட்டு சாவரதுக்கு வேணாம்.

(2) ஆனால், செல்வம் தேடுரதே வாழ்க்கைன்னு, வாழர நாட்கள்ளே வாழாமல், காசு சேக்கரதையே வாழ்க்கை யாக்கிட்டு, அப்படியே செத்துடறாங்கள்ளே, அவுங்கதான் அனேகம்.

பல ஆளுங்க தேடிய காசெல்லாம், அனுபவிக்க நேரமில்லமே, மத்தவங்களோடையும் பகிந்துக்கிடாமே ஏழையாவே வாழ்ந்து பணக்காரனா சாவுராங்க.

இவர்கள் பாரதி சொன்ன கண்ணிருந்தும் குருடர் என்கிற மாதிரி, இந்த வகை மக்கள் காசிருந்தும் ஏழைங்க.

நடராஜ் சார் சொல்றாப்புலே, பலபேரு பணக்காரனாவே சாவணும்கிற லட்சியத்துலே, ஏழையாவே வாழரானுக.

இப்ப என்னோட பதில் கெடச்சுதா?

இல்லியா, இப்ப சுத்தமா சொல்றேன் கேளுங்க.

**கடவுளுக்கு மூணு சாய்ஸ் கொடுத்திடுவேன்,**

(1) ஏழ்மைய தந்தா தவறாம, சந்தோசமா வாங்கிக்கிறேன்.

ஆனாக்க ஆசை - பேராசை பிடிச்சு தப்பான வழிலே இறங்கிடாம, பாரதியார் மாதிரி, வள்ளலார் மாதிரி எல்லோருக்கும் உதவர குணம், யாருக்கும் எந்த கெடுதலும் செய்யாம வாழற குணம் இதெல்லாமே கூடவே தரணும்.

(2) சரி. பணக்காரனாத்தான் பொரக்கணுமின்னு கடவுள் சொன்னாக்க அதையும் ஏத்துக்கிறேன்.

அதையும் வேணாம்னு சொல்லல்லே. ஆனாக்க, எனக்கு உள்ள செல்வத்தை இல்லாத எல்லாத்துக்கும் பகிர்ந்த தர

கொணத்தையும் கூடவே தரணும்.

(2) ஏழையாவும் இல்லாம, பணக்காரனாவும் இல்லாம அல்லாடுர இரண்டும் கெட்டான் மக்களாத்தான் வாழ்னுமின்னு கடவுளு சொன்னாக்க. அதுவும் சரி.

அதோட, பணம் சேக்கிற குணத்தைத் தராம அறிவை மட்டும் சேக்கிற குணம் கொடுத்திரய்யான்னு கேட்டிருவேன்.

இப்படி கண்டிசன்லாம் போட்டாக்க கடவுளுக்கு கோபம் வரலாம். சுத்தி வளைக்காம சுருக்கமா சொல்லுன்னார்னா,

என்னவா வாழ்ந்தாலும் பரவாயில்லே, அறிவை மட்டும் அள்ளிதாங்கய்யான்னு கேட்டுருவேன்.

அது என்னையா அறிவு? அது கெடச்சா போதுமா? பணமில்லாம எப்படி வளமையா, பசி, நோய் நொடியில்லாம வாழறது?

### அத்தியாயம் 14

# நல்ல வாழ்க்கை எது?
# அறிவைத் தேடி, அறிவால் வாழ்வது.

நடராஜன்: கந்தசாமி நம்மை ஒரேடியா கவுத்திட்டாருன்னு படிக்கிறவங்க நினைக்க மாட்டாங்களா?.

ஏதோ பெரிசா, பணக்காரனாகரத்துக்கு விவரம் சொல்லப் போரீங்கன்னு பாத்தா, ஏழ்மையும் செல்வம் கொழிக்கிற வாழ்க்கையும் ஒண்ணுதான்னு டப்புனு முடிச்சிட்டீங்க.

**கந்தசாமி தொடர்கிறார்,**

எந்த ஒரு மனுசனுக்கும் தான் இருக்கிற இடம் பிடிக்கிறதில்லை. தான் செய்யிர வேல பிடிக்கறதில்லை. இருக்கறத உட்டுட்டு பறக்கறத பிடிக்கிறதுலே ஒரு ஆசை.

தான் இருக்கிற இடத்திலேந்து தொலைவுலே இருக்கறதைப் பாத்து, அக்கரை இக்கரையவிட பசுமையா இருக்கும்பான்.

## குரங்குப் பிடிகள்

ஏழைக்கு நடுத்தரமா இல்லே பணக்காரனாரதிலே கனவு. பணக்காரனுக்கு ஏழையோட ஒட்டு-உறவு, சிரிச்சு வாழறது பிடிக்கும். ஆனா, தடையா எது வருது? பணத்தை பிடித்த பிடி. யாருமே தான் பிடித்த பிடியை விட்டு விட்டால் துயரங்கள் தூர விலகும்.

வடக்கே காசி ஹரித்துவார்ன்னு புண்ணியத் தலங்களுக்கு போவாங்க. அப்படி போரத்தே, பிடித்ததை விட்டிரனும்னு ஒரு விரதம் எடுத்துக்கணும். எதை விட்டிரணும்? தானாக, தேடிப் பிடித்து சேர்த்து வைத்திருக்கும் அறியாமை, கௌரவம், பெருமை, பொறமை என்கிற தீமைகளை விட்டுவிடனும்.

நாம என்ன செய்யறோம்? பிடிக்காத பாவக்கா, புளிக்கிற மாம்பழம் - எல்லாத்தையும் விட்டுவிட்டதா சொல்லி

நம்மளை நாமே ஏமாத்திக்கிறோம்.

**அறிவில்லாதவருக்கு செல்வம் அழிவை மட்டுமே தரும்.**

**அறிவில்லாத ஏழ்மை துயரம் வாழ்க்கைத் துணை போல, விடாமல் பின் தொடரும்.**

**அறிவு மாத்திரம் இருந்துட்டாக்க, செல்வத்தை குவிக்க ஆசப்பட மாட்டோம். வறுமையும் நம்மை வாட்டாது.**

ஆழ்ந்து சிந்திச்சா, வளமையோ, ஏழ்மையோ - பணத்துலே இல்லே. இருக்கிற செல்வத்தை (எத்தனை சிறிதானலும்) பயன் படுத்தறதுலே இருக்கு.

செல்வம் தேட அறிவு வேணும். தேடியதை சரியா பயன் படுத்த அறிவு வேணும். பணம் ஓடிராம வைச்சிருக்கரதுக்கும் அறிவு வேணும். அது நம்மள அழிச்சிராம நம்ம நாமே காப்பாத்திகிடவும் அறிவு வேணும்.

நம்மை சுத்தி தினம் தினம் பல உதாரணங்கள் முளைசிட்டே இருக்கு. அதுலே அறிவைத்தேடலாம்.

**அறிவில்லாதவரிடம், தேடிய செல்வம் தங்காது.**

நடராஜன் சாருக்கு தெரிஞ்சவர் ஒருவர், மஹாராஷ்த்ர மானிலத்தை சேர்ந்தவர். பாங்க் மானேஜரா இருந்துட்டு சுயமாக பதவியிலிருந்து ஓய்வு பெற்றார். சுமார் 50 லட்சம் அளவில் ஓய்வு ஊதியமாக கிடைச்சுதாம். யாரோ சொன்னாங்கன்னு அத்தனையும் கொண்டு ஸ்டாக் மார்கெட்டுலே போட்டாராம்.

அடுத்த மாசமே 50 லட்சம் 30 லட்சமா குறைஞ்சு தாம். திருப்பி 50 லட்சமா மாற எத்தனை வருசம் தவம் இருக்கணுமோ தெரியாது.

இந்த மனுசன் என்னிக்கி நிம்மதியா தூங்குவான், சொல்லுங்க? இவரு மாதிரி எத்தனையோ ஏழை பணக்காரன்னு வித்தியாசம் இல்லாம, தெனம் தெனம் எத்தனை பேருங்க ஏமாறரானுக? ஏழையாயிடரானுங்க.

இப்போ ஒரு வித்தியாசம் பாருங்க.

பிராடு சாமியாருங்களைப் பத்தி மாத்திரம் தெரிஞ்ச நமக்கு உண்மையான ஞானிகள் பக்கம் கவனம் போறதில்லே.

ராம கிருஷ்ண பரமஹம்சர், ரமணரு, சேசாத்திரி சாமிகள், காஞ்சி மாமுனிவர் இன்னும் அதுபோல நல்ல ஆன்மிகத் தலைவர்கள் வாழ்ந்த பூமி இது. புத்தராகட்டும் இயேசு பிரானாகட்டும், தீர்க்கதரசி முகம்மது அவர்களாகட்டும், இவங்களுக்கு என்ன சொத்து இருந்ததுன்னா எல்லோரும் கேட்டாங்க.

மனிதர்கள் அத்தன பேரும் நல்லா ஒத்துமையா, துயரம் இல்லாம வாழணும்னு தானே இந்த எல்லோருமே ஆசப்பட்டாங்க.

நாம எப்படிப் பட்டவங்க? நாம ஒருத்தனக் கெடுக்க நினைக்க இன்னதான் காரணமுனு இல்லே. அடுத்தவன் நம்மைவிட நல்லா இருக்கறது போல இருந்தாலே போதுமே. அவன கெடுத்துட்டாத் தான் தூக்கமே வரும்.

(அ) சொத்து அதிகரிச்சா என்னாகும்? மொதல்லே தீய வழிகளிலே காணப்போகும். போகிறப்போ இருந்த நிம்மதியையும் கூடத் தூக்கிட்டுப் போயிடும்.

(ஆ) ஏழ்மை அதிகரிச்சா என்ன ஆகும். வறுமை உடம்பை தின்னுடும், ஒடம்போட ஒட்டின உயிரு உடனே பிரிஞ்சு ஓடிடும்.

(இ) அறிவு அதிகரிச்சா என்னாகும்?, மொதல்லே ஏழ்மையக் கண்டா உள்ள பயம் ஓடிரும். ஏழ்மைமேல ஒரு காதல் உண்டாகும்.

(1)நாம ஏழ்மையக் கண்டு பயப்படாம, அதை விரும்பி அணைச்சிக்கிட்டாக்க, ஏழ்மை நம்மள துன்புருத்தாது. ஞானிகளைப் பத்தி படிக்கிறப்போ கொடிய விலங்கெல்லாமே அவங்கள தொல்லை தராதுன்னு படிச்சிருக்கோம்.

அது எப்படி? எந்த ஒண்ணை நாம வெறுக்கவில்லையோ,

அல்லது அதைக்கண்டு பயம் கொள்வதில்லையோ, அவை நம்மிடம் அன்புகாட்டுகிறது. துன்புருத்துவதில்லை.

அதேபோல விரும்பி, தெரிஞ்சு அணைச்சிக்கிட்ட ஏழ்மை நமக்கு துயரம் தராது மாறாக அது நம்மை புனிதமாக்கிடும்.

(2)செல்வத்துமேல, பதவிமேலன்னு கண்டது மேல்லெல்லாம் ஆசப்படமாட்டோம். அதனால அதோத வர துன்பத்துக்கு ஆளாக மாட்டொம்.

நடராஜன் சார் சொல்லுவாரு: பொன் பொருள் பதவி எல்லாமே சக்திகள். அனுசக்தி மாதிரி,நெருப்பு மாதிரி மிகவும் சக்தி கொண்டவை. அதற்கு ஆக்கும் சக்தியும் உண்டு, தவறாமல் அழிக்கும் சக்தியும் உண்டு.

ஒருவர் கையில் பிடித்த எந்த சக்தியும், சிறிது கவனம் குறைந்தாலோ, அல்லது தன் கட்டுப்பாட்டிற்குள் வைக்கத் தவறியாலோ, பிடித்த சக்தி பிடித்தவரை அழிப்பது உறுதி.

அறிவில்லாதவன் அத்தனை பேரும் ராப்பகலா ஓடி ஆடி, தப்பு தண்டா பண்ணி, பதவிகளப் பிடிச்சு, செல்வத்த சம்பாதிச்சு உள்நாட்டுலே வெளிநாட்டுலே பொட்டீலே ச ட்டீலேன்னு சேக்கரான்.

என்னிக்காச்சும் ஒருநாள் இல்லாட்டா ஒரு நாள் செ ல்வம் ஓடத்தான் போகுது. சும்மாவா ஓடுது? அதுக்கு முன்னாடி ஒதவாக்கர பசங்கள பெத்து, அந்த புள்ளைங்க தப்பான பணத்திலே சீரளிஞ்சு - எல்லாமே செய்திலே வர்ரதுதானே.

அறிவு அதிகரிச்சுட்டே வரும்போது ஒருவன் இறைவனுக்கு சமமான குணங்களை கொள்கிறான்.

இறைவனும் ஏழைதான். எந்த நாட்டிலும் கடவுளுக்கு வங்கிக் கணக்கு கிடையாது. (இறைவன் பேரைச் சொல்லி நாம கோவில்லே வங்கிக் கணக்கு பணம் நகை எல்லாம் வச்சிருக்கோம்)

இறைவனுக்கு தவம் செய்து வரங்கள் பெறுவது பெரிதா.

இல்லை, வரம் தரும் இறைவனாவது பெரிதா?

**இப்போ சொல்லுங்க, நீங்க தேடப் போவது எதை ? அறிவா - செல்வமா - ஏழ்மையா?**

## ஏழைங்க செய்யிர தொழில்

*கந்தசாமி, மிலிடிரியிலே வேலையோட சிரமங்களைப் பற்றிச் சொன்னீங்க. அப்ப நீங்க மிலிட்டரிலே வேல செய்சிருக்கக் கூடாது என்பது உங்க எண்ணமா என்று கேட்க, அதுக்கு கந்தசாமி என்ன சொல்றாருன்னு படிப்போம்:*

தப்பா புரிஞ்சுக்கிட்டீங்களே. நாட்டுலே எல்லோருமே மிலிட்டரிலே கொஞ்ச நாளாச்சும் வேல பாக்கணும். அப்பதான் நம்ம நாட்டப் பத்தி முழு அறிவு வரும். நம்ம அறிவு, கண்ணோட்டம் எல்லாமே விரிவடையும்.

வேற வேல கெடக்கல்லேன்னுதான், நானும் என்னப் போல நெரயப்பேரு மிலிட்டரிலே வேலக்கு போனோம். இங்கே பட்டினிலே சாவரத்துக்கு, அங்கே குளுருலே, மோசமான சூழ்னினிலே செத்தாலும் பரவாயில்லை, பசி இல்லாம வாழலாமுன்னுதான், என்னப்போல பல பேரு, போரானுக.

ஒருவாட்டி ஒத்தன் மிலிட்டரிலே வேல செஞ்சா, தவறாம அவன் பிள்ளங்களும் மிலிட்டரிலே சேரத்தான் ஆசப்படும்.

நல்ல சாப்பாடு, துணிமணி எல்லாமே கிடைக்கும். வருச த்துக்கு ரண்டு மாசம் குடும்பத்தோட இருக்கலாம். பிள்ள குட்டிய நல்லா படிக்க வைக்க முடியும். அவங்களானு, நம்மளவிட வசதியா வாழ வழி கிடைக்கும். பென்சன் எல்லாமே இருக்கு.

முக்கியமா, மிலிட்டரிலே பழகின கட்டுப்பாடா வாழறது, டிசிப்ளின் இருக்குல்லே, அதுனாலே ரிடர்மெண்டு

ஆனதுக்கு அப்புரமும் மரியாதையான ஒரு வேல தப்பாம கிடைக்கும்.

அதுமட்டுமில்லே, மிலிட்டரிலே சேந்தப்புரம், தன்னால நாட்டு மேல ஒரு பக்தி வந்துரும். மக்களை எல்லையில இருந்துட்டு தொல்ல தராங்கல்லே, எதிரிங்க. அவங்க கிட்டேயிருந்து காப்பாத்றோமுன்னு ஒரு பெருமை தன்னால வந்துரும். வெள்ளத்தினாலே, புயல் எதுனாலேயும் ஆபத்தா? நாங்கதனய்யா மக்களுக்கு உதவுகிறோம். பூகம்பமா, மலை பிரதேசத்திலே நிலச் சரிவா, மிலிட்டரி தான்யா முன்னாலே நிற்கும்.

அங்கே பல மொழி பேசரவங்க ஒண்ணு கூடி வேல செய்யரது எல்லாம் அலாதி அனுபவங்க.

சிவில்லே எல்லோருமே ஒரு டிசிப்ளின் இல்லாமே வாழராங்க. அங்க டிசிப்ளின் இல்லையின்னா, ராணுவம் மட்டுமில்லே, நாடே நம்மளோடது இல்லாமே போயிரும்.

ஆனாக்க, நம்ம நாட்டுலே டிசிப்ளின்னாக்க எவனுக்கும் பிடிக்காது. எவனுக்கும் சிவில்லே பழக்கம் இல்லாததுனாலே மிலிட்டரி டிசிப்ளின்னாக்க பயப்படுவானுங்க.

நம்ம நாடு பின் தங்கியிருக்குல்ல, ஏன் தெரியுமா? ஏழையிலேன்து பணக்காரன் வர, பியூன்லேந்து ஆபிஸர் வரே, தலைவர், மந்திரியின்னு எவனுக்குமே டிசிப்ளின் ஒத்துவராது.

என் அண்ணன் மகன் சாப்ட்வேர் படிச்சுட்டு வெளிநாடு போயிட்டு வந்தானில்ல. அவன் சொல்லுவான், வெள்ளக்காரனுக நம்மப் போல நாடுங்களே ஆள முடிஞ்சு துன்னா, காரணம் அவங்க டிசிப்ளினும், நமக்கு டிசிப்ளின் இல்லாததும்தான்,

நமக்கும் அவங்களுக்கும் வித்தியாசம்முன்னு பாத்தா, அவுனுக கிட்டத்தட்ட எல்லாரும் பொது வாழ்கையிலே எல்லா இடங்கள்ளேயும் அதாவது ரோடுலே, கடைங்களிலே டிசிப்ளினோட இருப்பாங்க.

கண்ட எடத்துலே குப்ப போடறது, துப்பறது, அசிங்கம் பண்ரது வண்டிகள இஷ்டப்படி மத்தவங்களுக்கு எடஞ்ச லா ஓட்றது, நிப்பாட்றது. ஆம்புலன்ஸ் வந்தா வழி விடறதில்லே.

பப்ளிக்குலே கட்சிக்காரங்க அடாவுடி பண்றது, ரோடத்தோண்டி கட்சிக் கொடி வைக்கிறது. ஊர்வலம் கடையடப்புன்னு கலாட்டா பண்றது.

இதுனாலே சாதாரண மக்களுக்கு, உங்களுக்கும் எனக்கும் என்னய்யா, பிரயோசனம்? என்னிக்காச்சும் இவனுக அடிக்கிற கூத்துலெ விலைவாசி குறைஞ்சிருக்கா? சில ஊர்லே ரொம்ப மோசங்க.

கடைசிலே அன்னாடம் கூலிவேல பண்றவன், வண்டி இழுக்கறவன் போல ஒழைச்சி பொழக்கிறவன் எல்லோர் வீட்டிலேயும் பட்டினி. இதை நம்ம நாட்டிலே கேக்கிறவனும் இல்லே. சொலறவனும் இல்லைய்யா.

ஆமா, நீங்க எதோ கேட்டீங்க நான் ஏதோதோ பேசிக்கிட்டுப் போறேன்.

ஆனாக்க சிப்பாயிங்களுக்கும் அதிகாரிக்கும் ஒரு வித்தியாசம். சிப்பாயிங்க எப்போதும், அடிச்சிக்கிடே இருக்கணுன்னு தமாசா சொல்லுவாங்க.

அது என்னாங்கரீங்களா? அசையாம இருக்கிறதுக்கு பெயிண்டு அடிக்கணும். ஏதாவது அசஞ்சிதுன்னா, அதுக்கு சலாம் அடிக்கணும். யாராச்சும் நடந்து போனாலும் வண்டியிலே போனாலும் அதுலே நம்ம விட, ராங்க்குலே பெரியவங்களாத்தான் இருக்கும். அவங்களுக்கு சலாம் அடிகல்லேன்னா குத்தமாயிரும்.

ஆபீசர் வேலைக்கு நெரய படிச்சவங்க வருவாங்க. அவங்கள்ளாம் நம்ம மாதிரி ஏழைங்களா?

ஒரு காலத்துலே நாட்டு எதிரிங்களோ, தீவிரவாதிங்களோட சண்ட போடரத்தே நெஞ்சுலே குண்டு வாங்க நாமதான் முன்னாடி நிப்போம்.

இப்போல்லாம் மிலிட்டரிலே படிச்ச இளம் புள்ளங்க ஆபீசரா வாராங்க. ஆபீசரானாலும், நம்மளோட சரி சமமா நின்னுகிட்டு சண்ட போடராங்க. பலரு தன் உசிர குடுத்து சிப்பாய்களோட உசிர காப்பாத்திருக்காங்கய்யா. சிவில்லே அப்புடி கேட்டுரிக்கிறீங்களா?

அதெல்லம் நெனச்சாக்க, தியாக மனபான்மை வளரும்யா. எல்லோருமே வாழ்க்கையிலே கொஞ்ச நாளாச்சும் மிலிட்டரிலே டூட்டி பாக்கணும்.

மிலிட்டரி வேல கஷ்டம்னு சொல்ல முடியாது.

அது மட்டுமில்லே, கோவில்லே கூட்டங்கூட்டி சாமிய பத்தி கதையெல்லாம் சொல்லுவாங்க. கம்ப ராமாயணம், பாரதம் அப்புடி இப்புடின்னு பல கதைங்க சொல்லுவாங்க

அதுலே கடவுள் கூட மனுசனா அவதாரம் எடுத்து வரதா சொல்லுவாங்க. அவங்களுக்கு கூட கஷ்டம் - சந்தோசம் மாறி மாறிதான் வருது.

எதுவுமே நாம மனச எப்படி பக்குவம் பண்ணிருக்கோமோ அப்புடித்தான் நமக்கு தோணும். கஷ்டமுனு நெனக்காம, இது நம்ம கடமை, இத சுத்தமா செய்யணுமின்னு செஞ்ச ாக்க எதுவுமே கஷ்டமில்லே.

# அத்தியாயம் 15

# அறிவு

## அறிவு = அறிதல் + சிந்தித்தல்

அறிவின் அவசியத்தை தெரிந்து கொண்டோம். ஏழை பணக்காரர் என்றில்லாமல் அறிவில்லாதவர் எல்லோரும், ஏழ்மையை அடைகிறார்கள் என்பதையும் புரிந்து கொண்டோம்.

இப்போது அறிவைக் கொண்டு மாத்திரமே ஒருவர் தாஆன் ஏழையாகாமல் இருக்கலாம். ஏழைகள் ஏழ்மையை விரட்டலாம் என்று ஒரு மாதிரியாக புரிஞ்சிக்கிட்டோம்.

**இப்போது அறிவை அலசுவோம்.**

அறிவு எப்படி இருக்கும்? எதிலெல்லாம் அறிவு இருக்கும்? அதிலிருந்து அறிவை தனியே பிரித்து எடுப்பது எப்படி, எங்கே எப்படி சேமிக்க வேண்டும். சேமித்ததை பயன் படுத்துவது எப்படி இதெல்லாம் தெரிந்து கொள்ளாமல் அறிவை அடைவது எப்படி?

பள்ளிகளில், பள்ளிக்கூடங்களில் கற்பதனால் அறிவு எதுவும் கிடைக்காதா?

கதைகளை படித்துவிட்டு, பிறகு கருத்துக்கு வரலாம்.

பொதுவா மக்கள் மத்திலே ஒரு தவறான எண்ணம். மனிதனுக்கு மட்டும் தான் அறிவு இருக்கு. மிருகங்கள் பறவைகள், மற்றும் அசையாத உயிர்களான தாவரங்கள் எல்லாத்துகும் ஆறாவது அறிவு - நல்லது எது கெட்டது எது என்று பகுத்துப்பார்கும் அறிவு கிடையாது என்பது. ஏழைகளே, இது ஒரு அப்பட்டமான பொய்.

ஜெ சி போஸ் என்கிற விஞ்ஞானி, தாவரங்களுக்கு தன்னை அடுதுள்ள மனிதனோட ஏண்ணங்களை புரிந்து கொள்கிற

சக்தி இருப்பதை பரிசோதனைகள் மூலம் நிரூபிச்சிருக்காரு.

நாய், ஒரு நன்றி உள்ள பிராணி. அது நம்மை, நம்ம வீட்டை காவல் காக்குது என்று நம்பராங்க. நாய்கள் மனிதனைவிட அறிவு அதிகம். அது நம்மை நம்ப வைத்து தண்டச் சோறு திங்குதில்லே.

வளத்து விட்ட அப்பா அம்மாவை அனாதை இல்லத்திலே சேத்துவிட்ட பல பேரு, ஓர் நாயை வீட்டிலே சொகுசா வளப்பாங்க. அதுக்கு என்ன உபசாரம்? தினசரி அதுக்காக காலையிலே வாக்கிங் கொண்டு போரது. கார் சவாரி என்ன? வைத்தியம் பாக்கறது எல்லாம் நடக்குது.

நாய் தன்னோட எஜமானனுக்காக குறைக்க்கல்லே. அதுக்கு புது ஆளுங்களைக் கண்டா பயம். அதனால குரைக்குது. அதோட பயம் நமக்கு பயன்படுது. அவ்வளவுதான்.

வாலை குழைச்சுக்கிட்டு வந்த மனுசனை கவுத்துருலாம்னு அது தெரிஞ்சு வைத்திருக்கிற அளவுக்கு, அறிவு இல்லாமல் கவுந்துபோன மனுசனுக்கு தெரியல்லே.

சுருக்கமா சொன்னா, படைப்பிலே எல்லாத்துக்கும் தேவையான அறிவு இருக்கு. அறிவு நாய்க்கு குறைவிருந்தா தெருவிலேருந்து குரைச்சிட்டு இருக்கும், கூடுதல் அறிவிருக்கருது பங்களாலே வாழ்ந்து குரைத்துட்டிருக்கும்.

அதே சட்டம்தான் மனிதனுக்கும். அறிவோட அளவிலே வித்யாசம்தான் ஒருவன் வாழ்வது குடிசையா, இல்லை பங்களாவா என்பதை தீர்மானிக்கும்.

சில திருடனுங்க மாமிசத்துலே மயக்க மருந்து போட்டு, நாய்க்கு வச்சு, அது செத்துடும். பின்னே புகுந்து கொள்ளை அடிச்ச செய்தி நினைவிலே இல்லியா? பிடிச்ச உணவுக்காக நாய் எஜமான விசுங்வ்வாசத்தை மறந்திடுத்தா?

அடுத்தா, படிச்சிக்கிட்டே இருந்தா, அறிவ் சேர்ந்திடுமா? இல்லை, படிப்பே இல்லாட்டா அறிசு சேர்ந்திடுமா?

இதிலே பிரபல கல்வியாளர்கள் த்ரிந்து கொள்ளாத விஷயத்தை அலசுவோம்.

இப்ப சீனாநாட்டுக் கதை ஒன்று படிக்கலாம்.

**கதை : சீன அறிஞரும் எலியும்.**

பல நூறு வருசம் முன்னாலே சீனாலே ஒரு பெரிய ஆளு. சீனாக்காரன் அத்தனை பேருக்கும் அவரைத் தெரியும்.

அவர் வான சாஸ்திரம், கணிதம், இன்னும் என்ன என்ன விஞ்ஞான அறிவு இருத்ததோ அத்தையும் கரைத்துகு குடித்துவிட்டார்.



திருமணம் செய்து கொண்டால், தான் மேலும் கற்பது தடைபடும் என்று ஒண்டிக்கட்டையாகவே வாழ்க்கையை ஓட்டினார்.

கட்டு கட்டாக ஓலைச் சுவடிகளை தேடி பிடிப்பதும், அதைப் படிப்பதும் தான் பல காலமாக செய்த ஒரு காரியம்.

உதவிக்கு ஒரு வேலையாளை வைத்திருந்தார். சமையல் மற்றும் வீட்டு வேலைகள் எல்லாம் தானே செய்து, ஞானி தான் னுலகத்திிலுள்ள அறைவை எல்லாம் அடைவதற்கு பேருதவியாக இருந்தார்.

ஒரு நாள், ஓலைச் சுவடிகள் அடைக்கப் பட்டிருந்த சாக்கு மூட்டைகள் ஒன்றிலிருந்து வினோதமான ஒரு சப்தம். எலி ஒன்று எப்படியோ மூட்டை உள்ளே நுழைந்து ஓலைச் சுவடிகளை தன் பற்களால் பதம் பார்க்க, ஞானிக்கு கட்டுக்கடங்காத கோபம்.

வேலையாளை அழைத்து, அந்த மூட்டையைக் கண்டு பிடித்து, அவிழ்க்க உத்தரவிட்டார்.

வெளியே குதித்தோடும் எலியை அடித்துக் கொல்ல ஒரு கழியுடன் தயாராக நின்றார்.

மூட்டை அவிழ்க்கப்பட்டது. தொப்பென்று எலி விழுந்தது. ஞானி எதிர்பார்த்ததைப் போல குதிஆளிதம்த்து ஓடவில்லை.

ஓலைச்சுவடிகளின் பளுவில் செத்துவிட்டதென்று கழியை வீசிவிட்டு, வேல்லையாளிடம் செத்த எலியை அப்புரப்படுத்த உத்தரவிட்டார், பின் தான் படித்துக் கொண்டிருந்த ஓலைச் சுவடியை படிக்க ஆரம்பித்தார்,

வேலையாள், எலியை அதன் வாலினால் பிடிக்க நெருங்கிய போது, துள்ளி எழுந்து திறந்த கதவு ஒன்றின் வழியாக ஓடி மறைந்தது பொல்லாத எலி.

உலகத்திலுள்ள எல்லா அறிவையும் தேடிப்பிடித்த ஞானியை. ஓலைச் சுவடியை படித்து அறிவை வளர்க்க திறனில்லாத ஒரு சாதாரண எலி ஒன்று ஏமாற்றிய சம்பவம் ஞானியை வெகுவாக பாதித்தது.

கதையோட கருத்தை இப்படி சொல்லிடலாமா:

ஏட்டு அறிவு எத்தனை இருந்தாலும் கற்றதை உண்மை வாழ்க்கையோடு இணைத்து சிந்திக்க இயலாதவர்களை எலி கூட ஏமாற்றிவிடாம்.

கதையை விட்டு நகர்ந்து கல்வியை பிடிச்சுப்போம்.

## கல்விக் கூடங்கள்

இதை இரண்டு விதமாக பார்க்கலாம். முதலில், ஒரு தொழில் செய்து வயிரை வளர்க்க ஒருவிதமான கல்வி. சரியா செ ால்லிக் கொடுத்து சரியா மனசுலே ஏத்திக்கிட்டா இந்த வகை கல்வி ஓரளவு பயன் தரும்.

பல வருடங்களுக்கு முன்னால், வாழ்ந்திருந்த பல விஞ்ஞானிகளும், மெய்ஞானிகளும் உணர்ந்து அறிந்ததை எல்லமே சேத்து வைத்து அவற்றை நாம் உணர்ந்து

அறியாமலே. தெரிந்து அறிவது - அதிவேகத்தில் நம்மை அடைந்திட, கல்வி ஒரு ஏற்பாடு. இதை எத்தனை பேரு சுத்தமா புரிஞ்சுகிட்டிருக்காங்களோ தெரியல்லே.

மொழி, இலக்கணம் ஆகியவை ஓரளவுக்கு போதிக்கப் படுவது ஒரு சிறப்பு. அவை, ஒருவருக்கு தெரிந்ததை மற்றவர்களோடு பரிமாரிக் கொண்டு அறிவை வளர்த்துக் கொள்ள ஒரு தலை சிறந்த கருவி.

அந்த மொழிக் கல்வி என்கிற கருவியை. சரிவர பயன் படுத்தினால் அதன் மூலம் அதிவிரைவாக அறிவை அடைவது சாத்தியமாகும்.

**சரிவர பயன் படுத்தினால், என்று சொல்லிய காரணம் என்ன?** தெரிந்து கொள்வது மாத்திரமே அறிவாகாது.

தெரிந்து கொள்வது அறிவைச் சேர்க்கிற முயற்சியிலே ஒரு முதல் கட்டம். எதை எல்லாம் தெரிஞ்சிக்கலாம்?

## (அ) பல வழிகளில் செய்திகளைத் தேடுவது.

நமது சமுதாயம், முக்கியமாக ஏழ்மையைத் தழுவியோர், தவிர்து வரும் செயல். எந்த முயற்சியும் செய்யாமல் தானாக வந்தடையும் செய்திகளையும் அலட்சியம் செய்வது.

### (ஆ) அடைந்த செய்தியில், படிப்பினையைத் தேடி அவற்றை அடைவது. அந்த படிப்பினையை ஒரு அறிவுத் துளி என்று சொல்லிடுவோம்.

நாம் படிப்பதில், கேட்டதில், கண்டதில் அறிவைத் தேடி வைத்த அறிவுத் துளிகளை விடாம நம்ம மனசிலே சேர்த்துக்கிட்டு வரவேண்டும். காலப்போக்கில் இவை எல்லாம் மனதிலிருந்து அகன்றுவிடும். புதிய நிகழ்வுகள் பழைய நினைவுகளை அழித்துவிடும். ஆக நினைவாற்றலை வளர்க்க வேண்டும்.

## (இ) மனப் பாடம் செய்து பழகுவது.

நினைவாற்றலை வளர்க்க முக்கியமான பயிற்சி. நமக்கெல்லாம் இந்த ஆற்றல் இயற்கையில் மிக மிகக் குறைவாக இருக்கும். இதை அதிகரிக்க பிள்ளைப் பருவத்தில் தொடங்கி மனப்பாடம் செய்வதை வழக்கமாக கொள்வது அவசியம்.

இந்த பயிற்சி மனிதருக்கு அதிக படிப்பினைகளை மனதில் சேகரித்து, வாழ்க்கை என்னும் போர்க்களத்தில் தோல் விகளைக் குறைக்கவும் வெற்றி வாய்ப்பை அதிகரிக்கவும் உதவும்.

## (ஈ) பயனாக்கம்:

மூன்று கட்டங்களாக நாம் அடைந்து, சேகரித்த அறிவு தன்னைப் தோல்விகளிலிருந்து தப்பிக்க உதவவில்லை என்றால், அறிவை அடைந்தும், சேமித்து வைத்தும் பய னில்லை.

தினம்தோரும் நாம் செயல்படும் போதும், தீர்மானங்கள் செய்யும் கட்டத்திலும், நினைவிலிருந்து தேடிக் கிடைத்த அறிவை இணத்து சரியான முடிவை எடுப்பது கடைசிக் கட்டம்.

இந்த அத்தியாயத்துலே பார்த்ததை படிச்சதை வைத்து நாம் எல்லோருமே நல்லா ஆகிடலாம்.

இதெல்லாம் சரி. மேலே கண்ட நான்கு படிகளில் ஒருவர் முன்னேறுவது எப்படி? இதை சில பக்கங்களிலே தெிர்ஞ்சுக்க முடியாது. அதனாலே, இதைத் மிக தெளிவாக, பல கதைகளை உதாரணங்களா சொல்லி விளக்க அடுத்த புத்தகம் அடுத்ததா தயாரிக்கப் போறோம்.

## மிக மிக நல்ல கேள்வி.

ஒருவர் சந்தேகம் கேட்டாரு, ஐய்யா, அதிக அறிவு உள்ளவங்களாலதான் குறைந்த அறிவுள்ளவங்களை ஏமாத்த முடியும். அப்ப அறிவாளிகளேல்லாம் ஏமாத்துற பார்டிகளா? ஒரு அளவுக்கு மேலே அறிவு வந்துட்டா, கெட்ட புத்தி, ஏமாத்திப் பிழைக்கிற பேமானித்தனம் எல்லாமே ஓடிரும். அப்புரம், வள்ளலாரு, பாரதியாரு, ரமணரு, சேசாத்திரி சாமிகள் மாதிரி நல்டூலது மட்டும்தான் செய்வாங்க.

இதப்பத்தி தேடல்கள் என்கிற பேருலே ஒரு புத்தகம் நடராஜ் சார் எழுதிருக்காரு.

முடிவுரை

ஏழைகளே, நாம் எல்லோரும் மிலிட்டரி கந்தசாமி அண்ணனுக்கு நிரைய கடமைப் பட்டிருக்கோம்.

இந்த அளவுக்கு, விவரமா தெரிஞ்சு வைத்து, அழகா, கதை எல்லாம் சேர்த்து, அருமையா யாருமோ சொன்னதில்லை.

சும்மா படிச்சா போதாது. நீங்களெல்லாம் படிச்சதை பயன் படுத்தி, அறிவை சேர்த்து, ஏழ்மைய தொலைத்திடனும்.

அப்படி நல்லா வாழ்வீங்க என்கிற நம்பிக்கை எனக்கும் கந்தசாமி அண்ணனுக்கும் வீண்போகக் கூட்டாது.

ஆசிகளுடன்

என். நடராஜன்